# உங்கள் குழந்தையின் எடை அவனது வயதிற்கேற்றதாக இருக்கிறதா?

அவன் சரியான அளவு தூக்கம் பெறுகிறானா?
அவனுக்கு முதல் பல் எப்போது முளைக்கும்?
அவனுக்குத் தேவையான ஊட்டம் முழுதும் நான் அளிக்கிறேனா?''

அவன் நிலையாக எப்போது உட்காருவான், பிடித்துக்கொள்ளாமல் எப்போது நிற்பான்?

ஒரு ''புதிய தாயின்'' மனதில் தோன்றும் இதுபோன்ற பற்பல கேள்விகளுக்கும் பதில் கிடைக்கிறது கைக்கடக்கமான ஒரு புத்தகத்தில். அதுதான் **''குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்,''** உங்களுக்காகவே புதிய ஃபாரெக்ஸ் வழங்கும் இலவச அன்பளிப்பு.

**''குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்,''** குழந்தை பராமரிப்பு பற்றிய மிக உபயோகமுள்ள ஏராளமான குறிப்புகள் அடங்கிய தாகும். உங்கள் குழந்தையின் உணவு நேரத்தை ஆனந்தகரமாக்க இதில் விசேஷமாக தொகுக்கப்பட்ட 23 சுவை மிக்க ஃபாரெக்ஸ் உணவுக் குறிப்புகளைக் காண்பீர்.

இன்றே உங்களது பிரதிக்கு எழுதவும்.

புதிய

## பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

உடல் நலத்தின் உறைவிடம்—க்ளாக்ஸோ

இக்கூப்பனை அனுப்பவேண்டிய முகவரி:
க்ளாக்ஸோ லாபரடரீஸ் (இந்தியா) லிமிடெட், தபால் பெட்டி எண் 19119 (FCM-19)-
பம்பாய் 400 025.

தயவுசெய்து எனக்கு ''குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்'' ஒரு பிரதி அனுப்பி வைக்கவும். தபால் மற்றும் இதர செலவுகளுக்கு இத்துடன் ரூ. 1/-க்கான தபால்தலை இணைத்துள்ளேன்.

பெயர் ______________________

முகவரி ______________________

______________________


______________________

CLARION/B/GX/6/203

# அது என்ன சிலிக்கான் படுக்கை?

**அமெரிக்காவில் சிகிச்சை பெற்று வரும் முதல்வருக்கு 'சிலிக்கான் தண்ணீர்ப் படுக்கை' பயன்படுகிறது. -செய்தி**

நோயாளி, படுக்கையில் ஒரே மாதிரி தொடர்ந்து பல மணி நேரம் படுத்துக் கொண்டிருந்தால், உடலின் தோலும், படுக்கையும் தொடும் இடங்களில் — குறிப்பாக எலும்புகள் தோலுக்கு மிக அருகில் இருக்கிற உடலின் பகுதிகளில் — சின்னச் சின்னதாய்க் கொப்புளங்களில் ஆரம்பித்து, ரத்தம் கட்டி, புண்கள் வரும். இதை 'பெட் ஸோர்' என்பார்கள்.

சாதாரண இலவம்பஞ்சுப் படுக்கையை விட, நுரை மெத்தை வசதியானது. அதை விட பெட்டர் 'ஆல்ஃபா பெட்' என்பது. இதுதான் நம் நாட்டில் நோயாளிகளுக்குப் பயன்படுத்தப்படுகிறது. சிலிக்கான் படுக்கை பற்றி இங்கே ரொம்பப் பேர் கேள்விப்பட்டிருக்கவே மாட்டார்கள். இந்தியாவுக்கு அதுமாதிரிப் படுக்கை ஒன்று கூட இன்னும் வரவழைக்கப்படவில்லை. இங்கே பயன்படுத்தப்படும் ஆல்ஃபா படுக்கையைவிட அது இன்னும் சௌகரியமானது. ஆல்ஃபா படுக்கையில் ஸ்டெபிலைசர் அளவில் ஒரு கருவி இணைக்கப்பட்டிருக்கும். அது மின்சார ப்ளக்குடன் இணைக்கப்பட்டவுடன், படுக்கையினுள் காற்று உள்ளே சென்று கொண்டிருக்கும் ஒரு வழியாக; அதேசமயம் மறு வழியே காற்று வெளியேறிக்கொண்டே இருக்கும். இதனால் மேலும், கீழும், பக்கவாட்டிலும் அசைந்து, அசைந்து, நோயாளிக்குக் கஷ்டமில்லாமல் இருக்கும்.

இப்போது முதல்வருக்குத் தரப்பட்டுள்ள சிலிக்கான் தண்ணீர்ப் படுக்கையில், படுக்கையின் மேல், உள், அடிப் பரப்புகள் ஸிலிக்கான் என்கிற மிக உயர்ந்த ரசாயனப் பொருளின் பூச்சு தரப்பட்டிருக்கும். இது எந்த சமயத்திலும் படுக்கையின் பரப்பு, உடலுடன் ஒட்டுவதைத் தவிர்க்கும். உள்ளே காற்றுக்குப் பதிலாகத் தண்ணீர் இருக்கும். இது சூடு செய்யப்பட்ட தண்ணீர். ஆகவே, நோயாளியின் உடல்நிலையை ஒரே சீராகப் பாதுகாத்துக் கொள்ளும்.

அமெரிக்க நண்பர் ஒருவர் மூலமாய் நான் கேள்விப்பட்ட ஒரு விஷயம். இப்போது அங்கே, நோயாளிகள் தான் என்றில்லை, வசதி படைத்தவர்கள் எல்லோருக்குமே தண்ணீர்ப் படுக்கை ஒரு க்ரேஸ். வீட்டில் வாங்கிப் போட்டுக் கொள்கிறார்களாம். விலை அதிகம்தான். எம். ஜி. ஆருக்கு அளிக்கப்பட்டுள்ள சி. த. படுக்கையின் விலை 26,000 டாலர்கள். நம் ரூபாயில் சுமார் மூணு லகரம்.

தேவகி மருத்துவமனையின் **டாக்டர் சொக்கலிங்கம்** சொல்ல

**-எஸ். சந்திரமௌலி**

டாக்டர் சொக்கலிங்கம் ஆல்ஃபா படுக்கையுடன்



# எம்.ஜி. ஆருக்கு சிறுநீரகம் தேவைப்பட்டால்...

முதல்வர் எம். ஜி. ஆரின் சிறுநீரகங்கள் பழுதுபட்டிருக்கின்றன. எனவே மாற்றுச் சிறுநீரகம் பொருத்தப்பட வேண்டும் என்று கருத்து தெரிவிக்கப்பட்ட உடனே நூற்றுக் கணக்கானோர் தமது சிறுநீரகத்தை எம். ஜி. ஆருக்கு அளிக்க முன் வந்தனர். பம்பாயைச் சேர்ந்த மருத்துவ நிபுணர் டாக்டர் திருமதி மணியும் அமெரிக்க வல்லுனரும் எம். ஜி. ஆர். குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் சிறுநீரகத்தைப் பயன்படுத்துவது தான் நல்லது என்று கருத்துச் சொல்லவே எம். ஜி. ஆரின் சகோதரர் எம். ஜி. சக்ரபாணி குடும்பத்தினர் யாராவது ஒருவரின் சிறுநீரகத்தைப் பொருத்தலாம் என்று முடிவு செய்யப்பட்டது.

எம். ஜி. சக்ரபாணிக்கு 3 பெண்கள்; 7 மகன்கள் அத்தனை பேருடைய ரத்தம், சிறுநீர் போன்றவை டெஸ்ட்செய்யப்பட்டு, யாருடைய சிறுநீரகம் மிகவும் பொருத்தம் என்று பார்க்கப்பட்டது. பொருத்தத்தை வைத்துத் தயார் செய்யப்பட்ட வரிசையில் முதலில் இடம் பெற்றவர் திருமதி லீலாரவி.

திருமதி லீலாரவி சக்ரபாணியின் இரண்டாவது பெண். வயது 35. இவர் கணவர் திருச்சூரில் டாக்டர். இவருக்கு இரண்டு பெண்கள் (ஹேமலதா மிருணாளினி). இவர் திருமணத்தின் போது எம். ஜி. ஆர். சினிமாவில் இருந்தார். அவர்தான் அன்று தலைமையில் திருமணத்தை முன் நின்று நடத்தினாராம். ''எம். ஜி. ஆரிடம் எங்களுக்குச் சிறிய வயது முதலே ரொம்ப பயம்; கண்டிப்புக்காரர் அவர். எதிரில் நின்று பேசவே பயப்படுவோம் நானும் என் தம்பிகளும்.

''என் கணவர் டாக்டரானதால் அவரும் எனக்குத் தைரியம் சொன்னார். முதல்வருக்கு இப்படி உதவ வாய்ப்புக் கிடைத்திருப்பது என் பாக்கியம் என்று நினைக்கிறேன்'' என்றார் தழுதழுத்த குரலில். இவரது ரத்தம் பி. பாஸிடிவ் (எம். ஜி. ஆருடையதும் இது தானாம்.)

லிஸ்ட்டில் ஐந்தாவது இருந்தவர் ராஜேந்திரன். ஆனாலும் இவருக்கு முன்னால் இருந்தவர்கள் அதிக ரத்த அழுத்தம், சர்க்கரை போன்ற காரணங்களால் நிராகரிக்கப்பட்டனர். இவரது ரத்தம் ஓ. நெகடிவ் வகை. இவர் சக்ரபாணியின் ஐந்தாவது மகன். பாங்க் ஆஃப் மதுராவில் ஆபீஸர். 81—ல் திருமணம். எம். ஜி. ஆர். தான் முன்னின்று நடத்தி வைத்தாராம். இவருக்கு இரண்டு குழந்தைகள் (பிரவீண், பிரசாந்த்) ''பரிசோதனைகளின் போது, எனக்கு எங்கே வாய்ப்புக் கிடைக்கப்போகிறது. என் ரத்தம் வேறு குரூப்; அவர் ரத்தம் வேறு குரூப் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் எனக்கு இப்படி ஒரு சான்ஸ் வந்திருப்பது கண்டு பெருமைப்படுகிறேன்'' என்றார்.

''எம்.ஜி.ஆர். அமெரிக்கா சென்ற அன்று: பிற்பகல் நாங்கள் எல்லோருமாய் அப்போலோ ஆஸ்பத்திரிக்குப் போய், எம். ஜி. ஆரைப் பார்த்தோம். அவர் தூங்கிக்கொண்டிருந்தார். பார்த்துவிட்டு வந்து விட்டோம்'' என்றார் சக்ரபாணியின் கடைசிப் பையன் விஜயகுமார்.

திருமதி லீலா ரவி, ராஜேந்திரன், இரண்டு பேருடன் திருமதி சாந்தி ராஜேந்திரன், விஜயகுமார் ஆகியோரும் போகிறார்கள் அமெரிக்காவுக்கு.

இதற்கிடையில் எம். ஜி. ஆருக்கு ஒருவேளை ஆபரேஷனே தேவைப்படாது என்றும் நற்செய்தி வந்துள்ளது.

-மௌஷ்மி

## ...இவ்விருவரில் ஒருவர் தரப்போகிறார்

திரு. எம். சி. ராஜேந்திரன்



திருமதி லீலாரவி







# அனுதாப அலையை எதிர்ப்பது சாத்தியமா?

**பா**ராளுமன்றத்துக்குத் தேர்தல் அறிவிக்கப்பட்டு விட்டது. தேசிய அளவிலான எதிர்க்கட்சிகளுக்கு, பேச்சு வார்த்தை நடத்தி தொகுதி உடன்பாட்டுக்கு வர இருக்கும் காலமோ குறைவு. என்.டி.ஆர். இதற்காகப் பெரு முயற்சி எடுத்துக் கொண்டுள்ளார். தி.மு.க இதற்கு ஒப்புக் கொண்டுவிட்டது. எந்தெந்த பகுதியில் யாருக்கு செல்வாக்கு அதிகமோ அந்தக் கட்சி, அதிகமான தொகுதிகளில் போட்டியிட வேண்டும் என்பது அடிப்படையான அம்சம். இதற்குப் பெரும்பாலும் எல்லா எதிர்க்கட்சிகளும் ஒப்புக் கொண்டுவிட்டன. ஜனதாவில் மட்டும் ஒருசிலர் (மொரார்ஜி போன்றோர்) சரண்சிங் கட்சியுடன் தொகுதி உடன்பாடு கூட வைத்துக் கொள்ளக் கூடாது என்பதில் உறுதியாக இருக்கின்றனர். ஆனால், சமீபத்தில் சரண்சிங் கட்சியுடன் இணைந்த பகுகுணா, சுப்பிரமணியசாமி, ராஜ்நாராயண், போன்றோருக்குச் சில பகுதிகளில் செல்வாக்கு இருப்பதால், அந்தக் கட்சியுடன் தொகுதி உடன்பாட்டுக்கு வர முடியாமல் போய் விட்டால் எதிர்க்கட்சிகளின் ஓட்டுக்கள் சிதறி காங்கிரஸ் வெற்றி பெற வாய்ப்பு உண்டு என்பதால், கடைசி கட்டத்தில் சரண்சிங் கட்சியுடன், ஜனதாவும் தொகுதி உடன்பாட்டுக்கு ஒப்புக் கொள்ளக்கூடும்.

இ. காங்கிரஸைப் பொறுத்த வரை, இந்திராகாந்தியின் மீதுள்ள அனுதாபம் குறைவதற்கு முன்னர் தேர்தலை நடத்தி விடுவதென்ற முடிவுடன் செயல்படுகிறது. இந்த அனுதாபமே பெரிய பலம். ஆனால் பல்வேறு மாநிலங்களில், உட்கட்சித் தகராறினால், ஸ்தாபனம் சின்னாபின்னப்பட்டு இருக்கிறது. இந்திராகாந்தி இருக்கும்வரை, உட்கட்சித் தகராறுகளைச் சமாளித்து, மக்களுக்கும் தனக்கும் தான் நேரடித் தொடர்பு என்பது போல் ஒரு எண்ணத்தை ஏற்படுத்தியிருந்தார். ஆனால் ராஜீவ்காந்தி எப்படிச் செயல்படுவார் என்பதை இனித்தான் பார்க்க வேண்டும். எவ்வாறாயினும் மூன்றில் இரண்டு பங்கு தொகுதிகளை காங்கிரஸ் எளிதில் கைப்பற்றி விடும் என்றே எதிர்பார்க்கப்படுகிறது.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை எம்.ஜி.ஆர். இல்லாமல் நடக்கும் தேர்தல் இது.

பாராளுமன்றத்துக்கு மொத்தம் 40 இடங்கள் (பாண்டிச்சேரி உட்பட) உள்ளன. (இதில் 15 இடங்களில் அ.தி.மு.க.வும், 25 இடங்களில் இ. காங்கிரஸும் போட்டியிடும். சட்டமன்றத்தைப் பொறுத்தமட்டில் 70 இடங்களில் காங்கிரஸ் போட்டியிடும். மீதமுள்ள 164 இடங்களில் 160 இடங்களில் அ.தி.மு.க. போட்டியிடும். மீதமுள்ள நான்கு இடங்களில் குடியரசுக் கட்சி போன்ற உதிரிக் கட்சிகள் போட்டியிடலாம்.

கருணாநிதியைப் பொறுத்தமட்டில் இந்தத் தேர்தல், இதுவரை அவர் சந்தித்த தேர்தல்களைவிட, மிகவும் சங்கடத்தில் ஆழ்த்தும் தேர்தல். இந்திராகாந்தி, எம்.ஜி.ஆர். அனுதாப அலைகளை எதிர்த்து வெற்றி பெறுவது என்பது மிகவும் கஷ்டமான ஒன்று. இவரது 14 கட்சி கூட்டணியில், சி.பி.ஐ.,

தேர்தல் முன்னோட்டம்

சி. பி. எம்., காமராஜ் காங்கிரஸ், ஜனதா, போன்ற கட்சிகள் தான் ஓரளவு செல்வாக்கு உள்ளவை. இப்போது எஸ். டி. எஸ். கட்சி, கருணாநிதிக்குப் பெரிய தலைவலியை ஏற்படுத்தி இருக்கிறது.

இன்னும் அந்தக் கட்சியின் பலம் என்ன என்று தெரியாத நிலையில், எக்கச்சக்கமான இடங்களைத் தொகுதி பங்கீட்டில் கேட்பதாகத் தெரிகிறது. ''நாங்கள் கேட்பதில் என்ன தவறு; எம். ஜி. ஆரும், கருணாநிதியும் ஊழல் குற்றச்சாட்டுக்குள்ளானவர்கள். ஆனால் எங்கள் தலைவரோ கைசுத்தமானவர். மேலும் குறிப்பிட்ட வகுப்பினரிடையே எங்களுக்குப் பலம் இருக்கிறது. நாங்கள் கேட்பதைக் கொடுத்தால் கொடுக்கட்டும். இல்லையேல், ஜனதாவுடன் சேர்ந்து, மூன்றாவது அணிக்குப் பாடுபடுவோம்'' என்றார் எஸ். டி. எஸ். கட்சிப் பிரமுகர் ஒருவர்.

''மூன்றாவது அணியைத் தவிர்ப்பதில் மும்முரமாகத்தான் இருக்கிறோம். ஆனால் ஏதோ ஓரிரு மாவட்டங்களில் செல்வாக்கை வைத்துக் கொண்டு இப்படிப்பட்ட மிரட்டலில் இறங்கினால், எங்களுக்கு அதைச் சமாளிக்கத் தெரியும். எங்களைப் பொறுத்தவரை ஓரளவுக்கு நியாயமான வகையில், தொகுதி உடன்பாட்டுக்கு வருவோம். அவர்களே உதறிக் ,கொண்டு போனால் போகட்டுமே'' என்றார் தி. மு. க. பிரமுகர் ஒருவர்.

''எம். ஜி. ஆர். உடல்நலமின்றி இருக்கும் இந்த நேரத்தில் உங்கள் பிரச்சாரம் எப்படி இருக்கும்?'' என்று நாஞ்சில் மனோகரனைக் கேட்டபோது அவர் சொன்னார்: ''அ. தி. மு. க. வின் ஊழல்கள், இலங்கைப் பிரச்சினையில், மத்திய, மாநில அரசுகள் நடந்து கொண்ட முறைகள், ஆகியவைகளை வைத்துப் பிரசாரம் மேற்கொள்வோம். எம். ஜி. ஆர். இல்லாததால், ஆட்சி ஸ்தம்பித்து நிற்கிறது. ''வேலை நடக்கும் ஆட்சியை தருவோம்'' The Govt. that Works) என்பது எங்கள் கோஷமாக இருக்கும். தனிப்பட்ட முறையில் எம். ஜி. ஆர், என்ற மனிதர் நலமாகத் திரும்ப வேண்டும் என்பதே எங்கள் விருப்பம்.''

எம். ஜி. ஆர். இல்லாத சூழ்நிலையில் மந்திரிகளின் உட்கட்சிச் சண்டைகள் வெளிப்படையாகத் தெரிய ஆரம்பித்து இருக்கின்றன. வேட்பாளரைத் தேர்ந்தெடுப்பதில் சிக்கல் ஏற்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. கட்சி வேட்பாளர்களைத் தோற்கடிப்பதில் கட்சி ஆட்களே வேலை செய்வார்கள் என்றும் சொல்லப்படுகிறது. 'ஒற்றுமையாக இருந்தால் தான் சட்டமன்ற தேர்தல்' என்ற பிரதமரின் நிபந்தனைக்கு ஒப்புக் கொண்ட பிறகு தான் சட்டமன்றத் தேர்தலுக்கு அறிவிப்பு வெளியிடப்பட்டது. ஒற்றுமையை உருவாக்குவதில், அரசின் தலைமை இடத்தில் உள்ள ஒருவர் தீவிரமாக இறங்கியுள்ளார்.

எம். ஜி. ஆர். ஆஸ்பத்திரி படுக்கையில் படுத்துக் கொண்டு இருப்பது போல் படங்கள் எடுக்கப்பட்டுப் பிரச்சாரத்துக்குத் தயாராக இருக்கின்றன. 'இதுபோல் பிரச்சாரம் செய்வது தவறு அல்லவா?' என்று கேட்டதற்கு, ''1967-ல் எம். ஜி. ஆர். குண்டடிபட்டுப் படுக்கையில் இருந்தபோது எடுத்த படத்தை வெளியிட்டுப் பிரசாரம் செய்யவில்லையா?'' என்றார் அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

பல்வேறு எதிர்க்கட்சித் தலைவர்களிடம் பேசிய போது, இந்திராவின் எதிர்பாராத மரணம், எம். ஜி. ஆரின் உடல்நிலை ஆகியவை, இ. காங்கிரஸும், அ. தி. மு. க. வும் ஓட்டுக்களைப் பெற பெரிய உதவியாக இருக்கும் என்பதை ஒப்புக் கொண்டார்கள். ''இதை எப்படி எதிர்த்துப் பிரச்சாரம் செய்வது'' என்று நம்மிடமே ஆலோசனை கேட்டார் மூன்றெழுத்து தலைவர் ஒருவர்!

—நமது நிருபர்




பஸ் பிரயாணி: இந்தாங்க பத்து ரூபா! கடலூருக்கு ஒரு டிக்கட் கொடுங்க!

கண்டக்டர்: என்னிடம் சில்லறை இல்லை! உங்களிடம் சில்லறை இல்லைன்னா பஸ்ஸை விட்டு முதலில் கீழே இறங்குங்க!

பஸ் பிரயாணி: நீங்க மட்டும் சில்லறை இல்லாமல் பஸ்ஸுக்குள்ளே இருக்கலாமா? நீங்களும் கீழே இறங்கினால்தான் நானும் இறங்குவேன்!

—கடலூர் கன்னியப்பன்.





"எனது, பதினொறு
வயதுக் கால்பந்தாட்டக்
கில்லாடி அவன், ஒரு
நாள் உலகிலே மிகச்
சிறந்த 'ஃபார்வர்டு'
ஆவான்!"

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள்
நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!

1 கிலோ பேகிலும்
கிடைக்கிறது.
அதன் உள்ளே ஒரு
இலவசக்
குவளை.

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்... உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல, காட்பரியின் பிரபல பெயர் மட்டுமல்ல. அவற்றைவிட அதிகமே அதிகம். அதுதான போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரீஸ்
**போர்ன்விடா**
நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.




OBM/3784 TAM



# பாபாவுடன் ஒரு நாள்

(திரு. சி. சுப்பிரமணியம் அவர்களுடன் .ர்ந்து பாபாவின் பிரசாந்தி நிலயத்திய இரண்டு நாட்கள் தங்கியிருந்து அனுபவங்களைப் பெறும் அதிர்ஷ்டம் திரு. கே. எஸ். ராமானுஜம் அவர்களுக்குச் சில காலம் முன்பு கிடைத்தது. ஒரு நாளைய அலுவல்களை இங்கு விரிவாகத் தருகிறார்)

**நேரம்: அதிகாலை 4-30 மணி, இடம்: புட்டபர்த்தி**
பிரசாந்தி நிலயத்தின் பிரார்த்தனைக் கூடம். ஓம்கார ஒலி கம்பீரமாய் எழுகிறது. தொடர்ந்து சத்தியசாயி பாபா சுப்ரபாதம். அந்த அதிகாலை நேரத்திலும் பெரிய கூடம் நிரம்பி வழிகிறது. பிரார்த்தனை ஒலியைத் தவிர ஒரு சிறு சப்தமும் கிடையாது. கூட்டம் இரு குழுக்களாகப் பிரிந்து செல்கிறது. ஒரு சிலர் வேத கோஷம் செய்தவாறு பிரசாந்தி நிலயத்தை வலம் வருகின்றனர். மற்றொரு குழுவினர் பஜனை கீதங்களைப் பாடியபடி தாள வாத்தியங்களை முழக்கியபடி செல்கின்றனர். அமைதியான, ஒழுங்கான முறையில், சிறிதும் குழப்பமோ, கூச்சலோ இன்றி இவை நடைபெறுகின்றன.

**காலை எட்டு மணி:** திறந்த வெளியில் பாபா தரிசனத்துக்காக ஆயிரக்கணக்கான மக்கள் காத்திருக்கின்றனர்.

பாபா வெளியே வருகிறார். மெல்ல டக்தர்களிடையே நடந்து செல்கிறார். கருணையுடன் புன்னகைக்கிறார். ஆங்காங்கே நின்று பரிவோடு விசாரிக்கிறார். ஒரு சிலர் காகிதத்தில் எழுதித் தரும் கோரிக்கைகளையும் பிரார்த்தனைகளையும் மறுக்காமல் வாங்கிக் கொள்கிறார். வேறு சிலருக்கு விபூதி வரவழைத்துத் தருகிறார். இத்தனைக்கும் இடையே பிரமிப்பூட்டும் அமைதி! இவ்வாறு ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடி அமைதியுடன் இருப்பதை இந்தியாவில் வேறெங்கும் காண முடியாது.

கூட்டத்திலிருந்து சிலரைத் தேர்ந்தெடுத்துத் தம்முடன் அழைத்துச் செல்கிறார் பாபா.

**உள்ளே:** ஓர் இளம் தம்பதி குழந்தையுடன் வந்திருக்கின்றனர். ''குழந்தைக்கு பாபா பெயர் சூட்ட வேண்டும்'' என்று கேட்டுக் கொள்ள, சற்றும் யோசிக்காமல் நாமகரணம் செய்கிறார். பெயருக்கு அர்த்தம் என்ன என்றும் விளக்குகிறார். ஒரு வயதான மூதாட்டியைக் கருணையோடு தெலுங்கில் விசாரிக்கிறார். பாபா அருளால் தான் பரிபூரண குணமடைந்து விட்டதாகச் சொல்கிறார் அம்மூதாட்டி. பஞ்சாபி தொழிலதிபரிடம் கோயில் நிர்மாணப் பணி பற்றி விசாரிக்கிறார். ஓர் இளைஞனிடம் அவன் சகோதரனுடன் விரோதம் பாராட்டாமலிருக்குமாறு அறிவுரை வழங்குகிறார். 'குடும்பத்தில் சச்சரவைத் தவிர்க்க முடியாத உன்னால் வெளி உலகில் என்ன பிரமாதமாகச் சாதித்து விட முடியும்?' என்று கேட்கிறார். குடும்பங்களில் சாந்தி நிலவினால் சமுதாயமே அமைதியாக இருக்

கும் என்பதை உணர்த்துகிறார். காஷ்மீரி குடும்பத்துடன் ஹிந்தியில் உரையாடி மகிழ்கிறார். சற்றுமுன் தாம் பெயர் சூட்டிய குழந்தையின் தாயை மறுபடி நோக்கி, ''குழந்தையின் பெயர் என்ன?'' என்று கேட்கிறார். தாய் பதில் கூறு முன்பு அவர் கரத்தில் ஓர் அழகான தங்கச்சங்கிலி பாபாவின் உருவம் பதித்த டாலருடன் எப்படியோ, எங்கிருந்தோ வந்து காட்சியளிக்கிறது. அதனைக் குழந்தையின் கழுத்தில் அணிவிக்கிறார்.

''பாபா பேசுவதையெல்லாம் டேப்பில் பதிவு செய்யலாமா?'' என்று கேட்கிறேன். ''உங்கள் மனத்தில் ஆழமாகப் பதித்துக் கொள்ளுங்கள் — அதைவிட சிறந்த டேப் கிடையாது'' என்று அழகாகத் தமிழில் சொல்கிறார். தொடர்ந்து அவர் கூறும் அறிவுரை: ''நீங்கள் நாட்டில் நிலவும் எத்தனையோ பல பிரச்சினைகளைப் பற்றிச் சிந்தித்து சிந்தித்துக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரிகிறது. இதிலேயே பொழுதைக் கழித்து விடக் கூடாது. சிந்தனை தேவைதான். ஆனால் அறிவு பூர்வமாக அலசிக் கொண்டிருப்பதை விட இருதய பூர்வமாக நடவடிக்கை எடுப்பதினால் அதிகமாகச் சாதிக்க முடியும் என்பதை மறக்கக் கூடாது. ஒருமணிநேரம் ஒரு பிரச்சினையைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருப்பதை விட ஒரு மணி நேரம் பிறருக்குக் கருணையுடன் ஏதேனும் ஒரு விதத்தில் உதவுவதில் செலவிடுகிறவரே தேசத்துக்கு அதிக நன்மை செய்கிறார்'' என்கிறார். துணைக் கண்டத்தில் பல்வேறு இடங்களில் தமது இயக்கம் ஆறாயிரம் கிராமங்களைச் சுவீகரித்துக் கொண்டுள்ளதையும் அக் கிராமங்களில் ஒரு புதிய விழிப்புணர்ச்சி ஏற்படுத்தி வருவதையும் கூறுகிறார். இந்த விழிப்புணர்ச்சியின் அடிப்படை பக்தி, நல்லொழுக்கம், அவரவர் கடமையில் ஆழ்ந்த ஈடுபாடு — இவைதாம்.

**முற்பகலில்:**

நம் நாட்டின் கல்வி முறையில் புரட்சிகரமான மாற்றங்களை உடனடியாகக்கொண்டு வரவேண்டியதன் அவசியத்தை விஸ்தாரமாக விளக்குகிறார் பாபா. நமது சமூக, பொருளாதார, கலாச்சார, அரசியல்பிரச்சினைகளுக்குக் கூட மூலகாரணம் நமது கல்வி முறையில் உள்ள குறைபாடுகளே என்கிறார். இவற்றை அகற்றவே நாடெங்கும் பள்ளி, கல்லூரிகளை நிறுவி வருவதாகச் சொல்கிறார். இக்கல்வி நிலையங்களுக்கு நன்கொடைகளும் நிதியும் கேட்பதற்கு முன்னரே வந்து குவிவதை விவரிக்கிறார். எம்மாதிரியான கல்வி நம் தேசத்துக்கு ஏற்றது என்பது பற்றி திரு. வி. எஸ். அவர்களிடம் வெகு நேரம் உரையாடுகிறார்.

**பிற்பகலில்:**

பாபாவின் கல்வி நிலையத்தைச் சுற்றிப் பார்க்கிறோம்.

''வாழ்க்கை என்பது என்ன என்று கல்வி தான் உணர்த்த வேண்டும். மாணவனிடம் ஆன்மீகத்தையும் பண்பாட்டையும் வளர்க்க வேண்டும். வாழ்க்கையின் லட்சியத்தை அது வகுத்துத் தரவேண்டும். மனத்தைத் தூய்மைப்படுத்தி, நோக்கைத் தெளிவுபடுத்தி, நற்குணங்களை ஊக்குவித்து, கடமை உணர்வை ஊட்ட வேண்டும். இக வாழ்வில் சட்டுப்பாடும், பர வாழ்வில் இன்பமும் தேட வழிகாட்ட வேண்டும். ஒரு பழமொழி சொல்கிறது — கல்வி அடக்கத்தைக் கற்றுத் தருகிறது; அடக்கம் நம்பிக்கை விளைவிக்கும்; நம்பிக்கை செல்வத்தைத் தருவிக்கும்; செல்வம் ஈகையைத் தூண்டும். ஈகை இன்றும், என்றும் மகிழ்ச்சியையும் இன்பத்தையும் தரும்.'' — ஸ்ரீ சத்ய சாயி உயர் கல்வி நிலையத்தைச் சுற்றிப் பார்க்கும் போது பாபாவின் இந்த வார்த்தைகள் நினைவுக்கு வருகின்றன. காலையில் பஜனை கீதங்களை முழு ஈடுபாட்



டுடன். கணீர் என்று மாணவர்கள் பாடிய பிறகே வகுப்புக்கள் ஆரம்பிக்கின்றன. முதல் ஒரு மணி நேரம் இலக்கியமோ, விஞ்ஞானமோ சரித்திரமோ சொல்லித் தராமல் மனிதத் தன்மையின் மதிப்புக்கள் பற்றி (Human Values) வகுப்பு நடத்தப் படுகிறது. உலகெங்கிலுமிருந்து வந்து சேர்ந்துள்ள 5 முதல் 15 வயது வரையிலான குழந்தைகள் முகத்தில் மகிழ்ச்சியைத் தேக்கி புன்னகை பூக்கிறார்கள். அவர்கள் எல்லாருக்குமே பாபா தங்களைச் சதா கவனித்துக் கொண்டிருக்கிறார் என்ற எண்ணம் இருக்கிறது. துணைவேந்தர் திரு. விநாயக் கிருஷ்ண கோகக் சொன்னார்: ''ஒரு சமயம் பாபா கல்வி நிறுவனத்தைச் சுற்றி வரும்போது ஒரு மாணவனைத் தனியே அழைத்தார். 'சிகரெட் பிடிக்கக் கூடாது என்ற விதி முறையை மீறி, அது உடல் நலத்துக்குக் கெடுதல் என்று தெரிந்திருந்தும் ஏன் பிடித்தாய்?' என்று கேட்டார். மாணவன் தான் சிகரெட் பிடிக்கவில்லை என்றான். உடனே பாபா அவன் எந்தத் தேதியில் எந்த நேரத்தில் எந்தப் புதருக்குப் பின்னால் மறைந்திருந்து பிடித்தான் என்பதைக் கணக்காக நேரில் கண்டது போல் கூறினார். மாணவன் திகைத்துப் போய் பின்னர் மன்னிப்பு வேண்டினான். கருணைக் கடலிடம் அது தாராளமாகவே கிடைத்தது. இப்படி மாணவர்களை ஒட்டுமொத்தமாகவும் தனித்தனியாகவும் அவர் நல்வழிப்படுத்தும் சம்பவங்கள் எத்தனையோ! பாபாவின் நோக்கில் கல்வி என்பது அறிவூட்டுவது மட்டுமல்ல. உடல் ஆரோக்கியத்திலும் மனவளர்ச்சியிலும் கவனம் செலுத்தி சமுதாயப் பிரக்ஞையையும் ஏற்படுத்துவதை முக்கியமாக எண்ணுகிறார். அதன் படி பாடத் திட்டங்களை அமைத்திருக்கிறார்.''

இந்தியா முழுவதிலும் தாம் துவங்கியுள்ள பல கல்வி நிலையங்களை அவ்வப்போது பார்வையிட்டு வருகிறார் பாபா. அதிகாலை ஆறு மணி முதலே சத்ய சாயி நிறுவனத்தின் வெவ்வேறு துறைத் தலைவர்கள் அவரைக் கண்டு ஆலோசனைகள் பெற வந்து விடுகிறார்கள். இந்த நிறுவனங்களையெல்லாம் செம்மையாக நிர்வகிப்பதே ஒரு முழு நேரப்பணி. ஆனால் பாபாவின் கருணை உள்ளம் இத்துடன் திருப்தி அடைந்து விடுவதில்லை.

மாலை நான்கு மணி அளவில் மீண்டும் பஜனைகள் தொடங்குகின்றன. சற்றுநேரம் சென்று பாபா வருகிறார். பொது மக்களுக்குத் தரிசனம் அளிக்கிறார். மாறாத புன்னகையுடன் மக்களின் துயர் களைகிறார். நம்பி வந்தவர்கள் கண்கள் குளிரத் தரிசித்து இலேசாகிப் போன மனங்களுடன் திரும்புகிறார்கள். அவரைத் தங்களைக் காக்கும் பகவானாகவும், வழிகாட்டியாகவும் கருணைக் கடலாகவும் கண்டு மனநிறைவுடன் செல்கிறார்கள்.

அன்றாடம் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு அருள் செய்து வரும் பாபாவுக்கு நவம்பர் 23 ஜன்ம தினம். அடுத்த ஆண்டு அறுபது வயதாகும் அவருக்கு மணிவிழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாட அன்பர்கள் இப்போதே முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர்.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்: **சீதா ரவி**

## பாதிரியார் கூற்று

''தேவதைகள் மட்டுமே வானில் பறக்க முடியும். மனிதர்களால் முடியவே முடியாது'' என்று ஒரு பாதிரியார் கூறினார். அவர் கூறிய 50 ஆண்டுகளுக்குள் ஆர்வில் ரைட், வில்பர் ரைட் சகோதரர்கள் விமானத்தைக் கண்டுபிடித்துப் பறக்கவிட்டனர். மேலே சொன்ன கருத்தைக் கூறிய பாதிரியார் யார் தெரியுமா? ரைட் சகோதரர்களின் தந்தை 'மில்டன் ரைட்' தான்!

அதிசய உண்மைகள் என்ற நூலிலிருந்து: -எம். அசோக்ராஜா.





## தூங்கும் வரிசை

ஒரே சமயத்தில் எல்லா உறுப்புகளும் தூங்கத் தொடங்குவது இல்லை. முதலில் கண்கள், பிறகு வாசனையை அறியும் உறுப்புக்கள், பின்பு சுவை மொட்டுக்கள், காது, கடைசியில் தோல் இந்த வரிசையில் தூங்க ஆரம்பிக்கின்றன.

எழும்போது இது தலைகீழ் பாடமாக முதலில் தோல் தன் வேலையைத் தொடங்குகிறது. கண் கடைசியில் விழிக்கிறது.

—லலிதா செல்லப்பா.

# சமைத்து 4 மணி நேரங்கழித்துக்கூட மணம் கமழும் சூடான உணவை பரிமாற இக்லூ ஹாட் பேக் இப்பொழுது உங்களுக்கு உதவுகிறது




**மறுபடியும் சூடவைக்கும் வேலையே இல்லை**

சாதமானாலும் சரி, குழம்பு, கறி வகைகளானாலும் சரி, சமையலை சீக்கிரமே முடித்து இக்லூ ஹாட்பேக்கில் வைத்து மூடிவிடுங்கள். 4 மணி நேரம் கழித்து பரிமாறினாலும் உணவு சமைத்த சூட்டோடு, ருசியாகவும், சத்து மிக்கதாகவும் இருக்கும்.

**நேரமும் எரிபொருளும் மிச்சம்....**

ஏனெனில் உணவை மீண்டும் சூடாக்குவதை தவிர்க்கிறது. மேலும் உணவுச்சத்து இழப்பையும் இது தடுக்கிறது.

ஜெனரல் மர்ச்சன்ட்ஸ் கடைகளில் இக்லூ ஹாட்பேக் பல சைஸ்களில் கிடைக்கும். இன்றே ஒரு இக்லூ ஹாட்பேக் வாங்குங்கள். அதனால் பல விதத்திலும் லாபம். மேலும் அதிக ஓய்வு நேரம் கிடைக்கிறது.

**இக்லூ ஹாட்பேக்கின் திறமைக்கு ஒரு சான்று**

தொடர்ந்து இரண்டு மாதம் இந்த ஹாட்பேக்கை சோதித்து பார்த்து சென்னை கேடரிங் இன்ஸ்டிட்யூட் கீழ்க்கண்ட சான்றுரையை வழங்கியுள்ளது.

"இது உஷ்ணத்தை நன்கு பாதுகாக்கிறது. அதே சமயம் உணவில் ருசிக் குறைவு ஒன்றுமில்லை. 8 மணி நேரத்திற்கு பிறகு கூட உணவின் மணத்தில் ஒரு குறைவும் ஏற்படவில்லை...இப்பெட்டிகள் திறன் மிக்கவை!"

**IGLOO hotpack**



பியர்ட்ஸெல் இன்சுலேஷன் லிமிடெட்டின்

தரமான தயாரிப்பு

OBM 4897 TM R













தேர்தலுக்கு
முஸ்தீபு!




# கல்கி

1984 நவம்பர் 25
மலர் : 43 இதழ் : 17
ரக்தாக்ஷி கார்த்திகை 10




## ஜெயில்சிங் செய்தது சரியா?

நாடாளுமன்றத்தில் இ. காங்கிரஸ் கட்சி பெரும்பான்மை பலத்துடன் இருக்கும்போது அக்கட்சியின் நாடாளுமன்றத் தலைவராகவும், நாட்டின் பிரதமராகவும் ராஜீவ்காந்தி தேர்ந்தெடுக்கப்படுவார் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை. ஆனால் அக்டோபர் 31–ம் தேதி ஜெயில்சிங் நடந்துகொண்ட விதமும் சில மரபுகளைப் புறக்கணித்து ராஜீவ் காந்தியைப் பிரதமராக அவசரமாக அவர் நியமித்த முறையும் பல எதிர்க்கட்சித்தலைவர்களின் கண்டனத்துக்குள்ளாகியிருக்கின்றன.

இந்திய அரசியல் சட்டம், ஜனாதிபதிக்கு உதவுவதற்கும் ஆலோசனை கூறுவதற்கும் ஒரு அமைச்சரவை பிரதமர் தலைமையில் இயங்கும் என்கிறது. பிரதம மந்திரியை ஜனாதிபதி நியமிப்பார். மற்ற மந்திரிகளைப் பிரதமரின் ஆலோசனையின் பேரில் ஜனாதிபதி நியமிப்பார். மந்திரிசபை அளிக்கும் ஆலோசனையை ஜனாதிபதி ஏற்றே ஆகவேண்டும். வேண்டுமானால் மறுபரிசீலனைக்கு ஒரு தடவை மந்திரி சபைக்கே அந்த ஆலோசனையைத் திருப்பி அனுப்பலாம். ஆனால் அடுத்த தடவை ஏற்றுக் கொண்டே ஆகவேண்டும். ஆனால் அபூர்வமாகச் சில தருணங்களில் ஜனாதிபதி தாமே தனிப்பட்ட முறையில் முடிவெடுத்துச் செயல்பட வேண்டிய நிர்ப்பந்தச் சூழ்நிலை உருவாகும். அமைச்சரவை ஆலோசனை தர முடியாத சந்தர்ப்பம், அல்லது அந்த ஆலோசனை பொது மக்கள் நலனுக்கு விரோதமானது என்று ஜனாதிபதி தீவிரமாக நம்பும் சந்தர்ப்பம். இத்தகைய தருணங்களில் அவர் தனிப்பட்ட முறையில் முடிவெடுக்க விசேஷ அதிகாரங்கள் பெற்றிருக்கிறார் என்றால் அது சம்பிரதாய அடிப்படையில்தான். (Convention) பிரிட்டிஷ் அரசிக்கும் இதுபோன்ற அதிகாரம் உண்டு. இதுபோன்ற அபூர்வமான சமயங்களில் மக்கள் தம் முடிவை ஏற்பார்களா, ஆதரிப்பார்களா என்பதையே ஜனாதிபதி முக்கியமாகக் கவனிக்க வேண்டும். இந்த அதிகாரத்தை அவர் சில சிக்கலான சந்தர்ப்பங்களில் நாடாளுமன்றத்தைக் கலைக்கும்போதும் பிரதமரை நியமிக்கும் போதும் பிரயோகிக்க வேண்டி நேரலாம்.

சாதாரணமாகப் பிரதமர் இறந்து போனால் அமைச்சரவையில் இரண்டாவது இடம் பெற்றிருப்பவரைப் பிரதமராக நியமித்து நாடாளுமன்றம் புதிய பிரதமரைத் தேர்ந்தெடுக்கக் காத்திருக்கலாம். இப்படி இடைக்கால ஏற்பாடாகப் பிரதமராக வருபவரை ''அரைக்கம்பப் பிரதமர்'' என்று வேடிக்கையாகக் குறிப்பிடுவதுண்டு. தேசியக் கொடி அரைக்கம்பத்தில் பறக்கும் காலத்தில் பிரதமராக இருப்பவர் என்பதால் இப்படி சொல்வார்கள். நமது அரசியல் சாசனத்தில் தாற்காலிக பிரதமர் என்ற பதவி கிடையாது.

இந்திராகாந்தி மறைந்த போது இருந்த நிலைமை அசாதாரணமானது. இரண்டாம் இடம் அமைச்சரவையில் பெற்றிருந்த பிரணாப் முகர்ஜி மக்களவை உறுப்பினர் அல்ல, மாநிலங்களவை உறுப்பினர்தான். மூன்றாம் இடத்தில் இருந்த நரசிம்மராவ் உள்துறை அமைச்சர். இந்திராகாந்தி கொலை செய்யப்பட்டதற்குத் தார்மீகப் பொறுப்பேற்று ராஜினாமா செய்திருக்க வேண்டியவர். ஆகவே இவர்களில் ஒருவரைப் பிரதமராக்க முடியாது. நான்காவது ஐந்தாவது இடத்திலுள்ளவர்களைப் பிரதமராக்க அரசியல் மரபு இடம் தராது.

பதினாறு ஆண்டுக் காலம் மக்களின் பேராதரவுடன் பிரதமராயிருந்த இந்திராகாந்தி தமக்குப்பின் ராஜீவ் பிரதமராக வருவதற்கு அவரைத் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தார் என்பதை மக்கள் அனைவரும் அறிவர். அவர்கள் ராஜீவ் பிரதமராவதை வரவேற்பார்கள், ஏற்பார்கள் என்பதும் ஜனாதிபதிக்குத் தெரியும். பிரதமர் கட்டுக் கொல்லப்பட்டதால் நாட்டில் கொந்தளிப்பான நிலை. தாமதம் இன்றிப் புதிய பிரதமர் அறிவிக்கப்பட்டு அவர் வன்மையான முறையில் செயல்பட்டாலொழிய நிலைமை கட்டுக்கடங்காமல் போகலாம். இந்தச் சூழலில் ஜெயில்சிங் தமக்குள்ள அதிகாரத்தை நியாயமான முறையில் பிரயோகித்து நற்பெயர் சம்பாதித்திருக்கிறார் என்பதில் ஐயமில்லை.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.

## 6

## பரங்கியரை நம்புவது மோசம்

விட்டோபா எழுந்து வந்த போது, வர்மன் மனம் தளரவில்லை. நிதானமாக ஒரு பார்வையைச் செலுத்தினான். அதில் அனைத்துக் காட்சியும் விழுந்தாலும், அந்தப் பெண் சிறிது பிரத்தியேகமாக விழுந்தாள்.

என்ன வசீகரம் அவள்!

இளமையின் அத்தனை பூக்களும் அவள் மீது பூத்திருந்தன.

விழிகள் இரண்டும் இரு உணர்ச்சிச் சுழிகள்.

நிற்கும் நிலையில் சிற்பங்கள் நாணிவிடும்.

உறுத்தாத ஒரு மிருதுவான வனப்பில் இருந்தாள் அவள்.

நீண்ட மூச்சு ஒன்று வந்தது.

விட்டோபா அதற்குள் அவனை நெருங்கி இருந்தார்.

''என்ன சொன்னாய்'' என்று அவன் தோளைப் பலாத்காரமாக உலுக்கினார். அவரிடம் அப்படி ஒரு இரும்புத் தன்மை இருக்கதா? அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''ஐயா!'' என்றான் வினயமாக. ''தாங்கள் சொன்னதை அவசியம் செய்கிறேன். ஆனால் இந்தப் பரிசிலை மட்டும் அனுப்பாதீர்கள்'' என்று பெண்ணைக் குறிப்பிட்டுக் கூறினான்.

''இதில் என்ன குற்றம்?'' என்றார் அவர்.

''ஒரு பெண்ணை அடிமையாக்கி அந்தப்புரத்துக்கு அனுப்புவது எனக்குப் பிடிக்கவில்லை.''

''அஹ்ஹா'' என்று ஏளனத்துடன் சிரித்தார் விட்டோபா! ''நீயும் அடிமை! அவளும் அடிமை! அடிமைக்கு அடிமை என்ன கரிசனம் வேண்டிக் கிடக்கிறது. நான் சொன்னதை நீ செய்யத்தான் வேண்டும். என்ன சொல்கிறாய்?'' என்று சீறினார் அவர்.

வர்மன் அவரை நிதானமாகப் பார்த்தான். அவன் பார்வை மெள்ள இறுகியது.

''ஐயா! இதை நான் செய்வதற்கில்லை! பொறுத்தருளுங்கள்!'' என்றான்.

விட்டோபாவின் கோபம் உச்சியைக் கடந்தது. மீசையின் கணுக்கள் துடித்தன. ''இதன் முடிவு என்ன தெரியுமா?'' என்று கர்ஜித்தார் அவர்.

''தெரியும், சிரச்சேதம் தானே!''

''அதுதான்! இந்தா விஸ்வா!''

விஸ்வா என்ற மராட்டிய உபதளபதி முன்னால் வந்தான்.

''செய்ய வேண்டியதைச் செய்'' என்றார் விட்டோபா.

அறைக்கு வெளியே தாழ்வாரம்.

தாழ்வாரத்தை அடுத்துச் சதுரமான முற்றம்.

வெயில் அதில் உக்கிரமிட்டுக் கொண்டிருந்தது.

கல் பாவிய தரை! ஏற்கெனவே சினந்து வெந்து கொண்டிருந்தது.

வர்மனது கால் கைகளைக் கட்டி அங்கே கொண்டு போய் நிறுத்தினார்கள்.

''இஷ்ட தெய்வத்தைக் கும்பிட்டுக் கொள்!'' என்றான் சேவகன்.



மராட்டியரின் குணம் அவனுக்குத் தெரியும். ஆசான் சொல்லி இருந்தார். இரக்கமற்றவர்கள். தயை அற்றவர்கள். கொலை, கற்பழிப்பு, கொள்ளை எல்லாம் சர்வ சாதாரணம். அவன் ஒரு இளைஞன், வீரன், நியாயத்துக்காக வாழுபவன் என்பதெல்லாம் அவர்களுக்கு அர்த்தமற்ற விவகாரங்கள்.

''ஆத்தாளே!'' என்றான் அவன். கண் முன்னால் அவனது ஊர் முப்பிடாரி தெய்வத்தின் முகம் வந்தது. ''என் அம்மாவிடம் சொல்! நல்லதுக்குத் தான் நான் உயிர் துறக்கிறேன். அவளைக் காப்பாற்று'' என்றான். கண்கள் கலங்கின.

ஒரு கணம் அவன் பார்வை அந்தப் பெண் மீது விழுந்தது. அவள் கண்கள் இன்னும் அஃறிணை போல் நின்றன. சலனமில்லை. ஜீவன் இல்லை. இந்த உலக நினைப்பே இல்லாதவன் போல் நின்றான்.

''குனி.''

குனிந்தான்.



ஸ்ரீ வேணுகோபாலன்

வாயா?'' என்றார் விட்டோபா, வர்மனை நோக்கி.

வர்மன் நிமிர்ந்து பார்த்தான். அந்தப் பெண்ணின் பார்வையைச் சந்திக்க விருப்ப மில்லை. இருப்பினும் அவனை மீறிப் பார்வை அதில் விழுந்தது. இந்த முறை அவளது மிருதுவான கண்ணுள் துணுக்குச் சுடர் மினுக்கியது. அவள் முகத்தில் ஒரு துடுக்கும் அலட்சியமும் பின்னி இருந்தன. அவன் மனம் சற்று வெதும்பியது.

கண்களை இழுத்துத் தாழ்வாக இறக்கினான். முற்றத்தின் பாவு கற்களைப் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு ஹூம் என்று சொல்லித் தலையை அசைக்க விட்டோபா.

''என்ன தம்பி ஒத்துக் கொள்கிறாயா?'' என்று கேட்டார்.

வாள் ஒன்று காற்றைச் சலனப்படுத்தி மேலே எழுந்தது.

இனி அவன் கதி...

விநாடிதான்.

கீச்சாக வந்த அந்தக் குரல் அவனை உலுக்கியது. அந்தச் சத்திரத்தையே துடிக்க வைத்தது.

அந்தப் பெண்ணின் குரல் அது!

அது தந்த அதிர்ச்சியில் சேவகன் வாளை இறக்கினான்.

எல்லோரும் அவளைத் திரும்பிப் பார்த்தார்கள்.

விட்டோபா கனத்த அடி வைத்து அவள் அருகே வந்தார். ''இந்தா ஏன் கத்தினாய்? என்ன வேணும் உனக்கு?'' என்றார் கடுமையாக.

''ஐயா! நான் தாசி குலம்! ஏற்கெனவே அடிமை! இந்த அடிமை ஒரு கிராமத்துப் பிரபுவிடம் வாழ்ந்தால் என்ன. அல்லது ஒரு அந்தப்புரத்து ஜமீனிடம் வாழ்ந்தால் என்ன? இவர் ஏன் இப்படி அலட்டிக்கொள்கிறார்'' என்றாள் துணிச்சலோடு.

விட்டோபாவின் கடுகடுப்பைக் கீறி மெல்லிய புன்னகை உதயமிட்டது.

''கேட்டுக்கொள்! அதிகப்பிரசங்கி! இப்போதாவது நான் சொன்னதைச் செய்

சிறிது தயங்கினான் அவன். ''ஒரே ஒரு கேள்வி ஐயா!'' என்றான்.

''கேள்.''

''உங்களிடம் தான் எத்தனையோ வீரர்கள் இருக்கிறார்களே என்னை ஏன் இதைச் செய்யச் சொல்கிறீர்கள்?''

''தம்பி'' என்று புன்னகை விரியப்பேசினார் விட்டோபா! ''நீ ஒரு தமிழ் இளைஞன்! தமிழ் நன்றாகப் பேசுவாய்! இந்த வீரர்கள் தமிழ் பேசினாலும், மராட்டிய வாடை அடிக்கிறது! யாரும் இவர்களைச் சந்தேகித்து விடுவார்கள். நீ போகும் இடமெல்லாம் இங்கிலீஷ் கும்பினியார் செல்வாக்கு இருக்கிறது. இந்த வீரர்களை இனம் கண்டு விட்டால் பிடித்துக் கொள்வார்கள். அதனால் சுத்தத் தமிழ் பேசுபவனாகவும், சுத்த வீரனாகவும் உள்ள உன்னைத் தேர்ந்தெடுத்தேன். கவலை எதுவும் படாதே! கலங்காதே! இதை உன் சொந்த வீட்டுக்

காரியம் போல் செய்! உன் தந்தை வீரகுல சேகரரின் விடுதலைக்கு நான் உத்தரவாதம். புறப்படு!'' என்றார் அவர்.

வர்மன் தலையை மெள்ள அசைத்தான்.

திருச்சிராப்பள்ளிக் கோட்டைக்குக் கிழக்கே இரண்டு நாழிகை தூரத்தில் உள்ள தளவாய்ச் சத்திரத்தில் சந்தாசாகிப் தங்கி இறங்கி இருந்தார்.

வெளியே மேற்கு நோக்கி வெகு தூரம் வரை அவரது படை மனிதர்கள் வியாபித்திருந்தார்கள்.

அங்கங்கே சிறு தளபதிகளுக்கான கூடாரங்கள் கனத்த துணியினால் வேயப்பட்டு இருந்தது.

சுற்றியும் தென்னஞ்சோலைகளும், மாந்தோப்புகளும் நிரம்பியிருக்க, அருகில் வடக்குப்புறம் காவேரி கோடை நாள் காரணமாக மெலிந்து ஓடிக் கொண்டிருந்தது.

தளவாய்ச் சத்திரம் சற்றுப் பெரிய சத்திரம். கிணறு, தோட்டம், தொழுவம், விறகுக் கிடங்கு எல்லா வசதிகளும் சம்பிரமமாக இருந்தன.

காரையினால் கட்டப்பட்ட பெரும் சுவர்கள். முகப்பில் வெகு நீளமான தாழ்வாரமும் திண்ணையும்.

விசாலமான நடையைக் கடந்தால் ஐநூறு பேர் இருக்கத்தக்க கூடம்!

கூடத்தின் கிழக்கு மேற்கு பாரிசங்களில் மும்மூன்று பெரிய அறைகள்.

இந்த இரண்டு கட்டுக் கட்டடத்தில் தினம் நூறு இலைக்கு விருந்து அளிக்கும் விஸ்தாரத்தில் ஆர்க்காட்டு நவாபு சந்தாசாகிப் கவலையுடன் அமர்ந்திருந்தார்.

பீஹார் மாநிலத்தைச் சேர்ந்த டியோகிநந்தன் பிரசாத் என்பவர் 1967—ஆம் ஆண்டு அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றார். பதினேழு வருடங்களுக்குப் பிறகு அவருக்கு இப்போது தான் பென்ஷன் வழங்கப்பட்டுள்ளதாம்! தனக்குப் பென்ஷன் தரப்படவில்லையென டியோகிநந்தன் பிரசாத் சுப்ரீம் கோர்ட்டில் இருமுறை வழக்குத் தொடர்ந்த பிறகு வட்டியுடனும், கோர்ட் செலவுடனும் அவருக்குப் பென்ஷனைத் தரும்படி சுப்ரீம் கோர்ட் உத்தரவிட்டதாம்! அவருக்குக் கிடைத்த தொகை 4 லட்சத்து 53 ஆயிரம் ரூபாய்!

—கிதாபஞ்சு.




இண்டு போட்ட மெத்தை ஆசனம்! நுனிகளில் ஜரிகை வேலைப்பாடுகள். இரு புறமும் இருவர் விசிறிக் கொண்டிருந்தார்கள்.

பொன்மயமான 'இலட்' அணிந்து, தலைப் பாகை சூடி இடுப்பில் அரைப்பட்டை அணிந்திருந்தார் சந்தாசாகிப்.

அத்தனையிலும் முத்து அணிகள் சுடர்களாகத் தெறித்தன.

கழுத்தில் இரண்டு ஜோடி முத்துத் தாழ்வடங்கள் ஒளித்தோரணமாக இலங்கின.

பாகையில் வெண்சிறகு கம்பீரமாகச் சிகரமிட்டது. பாகை விளிம்புகளில் வயிர அணிகள் கோவையாக மின்னின.

கை புஜங்களில் கூட பொன் பூண்கள் கம்பீரமாக ஜொலித்தன.

செக்கச் செவேல் என்று உடம்பு!

அதில் அவரது நீல நயனங்கள் நேர்த்தியாகச் சோபை அளித்தன.

மத்திய வயது இருக்கும் அவருக்கு. தாடியில் அங்கங்கே நரைகள் வெள்ளிக்கம்பிகளாக மின்னிக் கொண்டிருந்தன.

வரிசையாகப் பிரமுகர்கள், படைத் தலைமைகளும், அதிகாரிகளும் அமர்ந்திருந்தனர்.

தளபதி சேஷராவ் சற்றுக் கவலையோடு நவாப் அருகில் அமர்ந்திருந்தார்.

''ஹுஜூர்! திருச்சிராப்பள்ளிக் கோட்டைக்குள் அகப்பட்டிருந்தாலும் தப்பிக்க வழி பண்ணலாம்! திருச்சிராப்பள்ளி சீமையில் அகப்பட்டது அதைவிட மோசமாக இருக்கிறதே!'' என்றார்.

''நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள், சேஷராவ்?'' என்றார் நவாப்.

''நாம் நினைத்தபடி ப்ரெஞ்சுக்காரர் நமக்குப் பூரண உதவி அளிக்க வரவில்லை.''

''முஸியே தொத்தேல் (Monsieur d' Auteuil) ஒரு துடைநடுங்கி! அவனைப் பற்றிப் புதுச்சேரிக்கு எழுதுகிறேன்'' என்றார் நவாப்.

''இங்கிலீஷ் கும்பினியார் ரகசியமாக ஏதோ செய்கிறார்கள் என்று கேள்வி! தேவனாம்பட்டணத்திலிருந்து (Fort St David Cuddalor ) படைகள் புறப்படுகின்றனவாம். திடீர்த் தாக்குதல் நம்மீது நடத்தினால் நாம் தப்பிக்க வழியில்லை. மைசூர் ராஜா, தஞ்சாவூர் ராஜா, புதுக்கோட்டைத் தொண்டைமான் எல்லோருமே எதிரி பங்கில் இருக்கிறார்கள். எல்லோரது படைகளும் குவிந்து கொண்டிருக்கின்றன. இந்த வேளையில் எல்லோருமாகச் சேர்ந்து நம்மைச் சூழ்ந்தாலும் சூழ்வார்கள். தப்பிக்க வழியில்லாமல் போய்விடும்.''

நவாப் தமது கரங்களை உயர்த்தினார்.

''அவ்வளவு மோசமாகும் வரை தூப்ளே காத்திருப்பாரா? அவர் நம் பங்கில் இருக்கும் வரை கவலை வேண்டாம். ஏதாவது செய்து படை கொண்டு வந்து விடுவார். தூப்ளே துபாஷி ஆனந்தரங்கம் பிள்ளைக்கு ஏற்கெனவே கடிதாசி எழுதி விட்டேன். நமக்கு ஆத்மநண்பர் அவர் ஆயிற்றே!''

நவாப் அடைந்த சமாதானங்களை சேஷராவ் அடைய முடியவில்லை. மேலே தொடர்ந்தார்:

இன்றிரவு நவம்பர் 22ம் 9-30க்கு

# கமலஹாசன்

கல்கி நேயர்களின் கேள்விகளுக்குப் பதிலளிக்கிறார்!



# கல்கி

வழங்கும்

# நேரம் நல்ல நேரம்

விவிதபாரதி சென்னை, திருச்சி வானொலி ஒலிபரப்பு

தயாரிப்பு: எஸ். வி. ரமணன்

புகைப்படம்: சுபா

- விஞ்ஞான ரீதியான படம் தமிழில் வருமா?
- சிவாஜி கணேசன் நடித்த படங்களில் தங்களைக் கவர்ந்தது எது?
- தங்கள் மனைவி மேக்-அப் கலை பயில அமெரிக்கா சென்று வந்தாரே...அதுகுறித்து...?
- தாங்கள் சமீபத்தில் ரசித்துச் சிரித்த மறக்க முடியாத ஜோக்?
- மற்றும் பல ரசமான கேள்விகளுக்குச் சுவையான பதில்கள்!

---

கமல் பதில்கள் ஒவ்வொரு வாரமும் கல்கியில் பிரசுரமாகும்

''நேற்று இரவு ஐம்பது சிப்பாய்கள் ஓடி விட்டார்கள்!''

நவாப் சுருக்கென்ற உணர்வோடு நிமிர்ந்தார். ''ஏன்! சம்பளம் பாக்கியா?'' என்றார் சற்று கரகரக்கும் குரலுடன்!

''ஒரு வருஷத்துக்கும் மேல் பாக்கி!''

''பத்திரம் எழுதிக் கொடுத்தோமில்லையா?''

''அது வெறும் காகிதந்தான்! எப்போது செல்லுபடியாகும் என்று கேட்கிறார்கள்.''

சம்பளம் கொடுக்க முடியாத நிலையில் பின்னர் தருவதாக வாக்களித்துப் பத்திரங்கள் எழுதிச் சிப்பாய்களுக்குக் கொடுத்திருந்தார் நவாப். அதை இப்போது நினைவு கூர்ந்தார்.

அப்படி ஒரு நிலை ஏற்பட்டதற்கு முகம் கொஞ்சம் கறுத்தது.

மேலே அவர் பேச முடியாமல் தவித்தது சபையில் பெரிய நிசப்தத்தை உண்டு பண்ணியது.

நவாப் நிதானமாக சேஷராவைப் பார்த்தார். ''சேஷராவ்! இன்னும் நிறைய சிப்பாய்கள் ஓடுவார்கள் என்று நினைக்கிறீர்களா?''

''அதுதான் எனக்குப் பயமாக இருக்கிறது!''

நவாப் தமது இடுப்பில் சுட்டியிருந்த பட்டையை வருடினார். விரல்கள் தத்தளித்து அவர் சஞ்சலத்தைக் காட்டியது.

''ஹூ ஸுர்!'' என்றார் ஒரு துணைத் தளபதி. ''உதவிக்கு மற்றவர் படை வந்தாலாவது சிப்பாய்கள் தெம்பு அடைவார்கள். யாரும் வராத நிலையில், பிரெஞ்சுக்காரரும் நழுவ விடும் நிலையில், பணம் ஒன்றுதான் சிப்பாய்களைச் சமாதானப்படுத்தும்.''

''பணத்திற்கு வழி என்ன?'' என்று கேட்டார் நவாப். யாரும் மறுமொழி கூறவில்லை. அவரே மேலும் தொடர்ந்தார்: ''வாங்க வேண்டிய இடத்தில் எல்லாம் வாங்கியாகி விட்டது. இன்னும் பலருக்கு எழுதவிருக்கிறேன். சீக்கிரம் வரும்!''

''துபாஷி ஆனந்தரங்கத்துக்கு எழுதினால் என்ன?''

''அதுவும் எழுதியாயிற்று! இந்தச் சண்டையில் ஜயித்தால் அவர் விரும்பிய கிராமங்களை அவருக்கு அளிப்பதாகக் கூறியிருக்கிறேன்.''

''அவரிடமிருந்து தகவல் எதுவும் வரவில்லையே!''

''இல்லை! தூட்ளேயிடமிருந்தும் வரவில்லை!''

''ஹூ ஸுர்!'' என்று எழுந்தார் துணைத் தளபதி. ''பரங்கியரை நம்புவது மோசம். அது பிரெஞ்சுக்காரராக இருந்தாலும் சரி, இங்கிலீஷ்காரராக இருந்தாலும் சரி!''

''அதை நானும் ஆமோதிக்கிறேன். அவர்களுக்கு நம் நாட்டில் இடம் கொடுக்கக் கூடாது! நம்மையே துரத்திவிடுவார்கள்'' என்றார் மற்றொரு உபதளபதி!

''பொறுங்கள்!'' என்றார் நவாப்! ''தற்சமயம் நடக்க வேண்டியதைச் சொல்லுங்கள்! எதிர்காலத்தில் நடந்து கொள்ள வேண்டிய உத்திகளைப்பின்னர் கவனித்துக் கொள்ளலாம்!'' இப்போது நம் எதிரிக்கு இங்கிலீஷ்காரர் உதவும்போது, நாம் பிரெஞ்சுக்காரரைத் துணைகொள்வதில் தப்பிதம் எதுவுமில்லை. ஆனால்...''

குரலை உயர்த்தினார் நவாப்.

''இந்தத் திருச்சிராப்பள்ளி, மதுரை திருநெல்வேலி, தஞ்சாவூர், புதுக்கோட்டை ஆகிய எல்லாச் சீமைகளும் எம் கையில் வந்தால்... நிச்சயம் வரும். ஆண்டவன் அருள் கொடுப்பான்... இந்த வெள்ளைக்காரர் அத்தனை பேரையும் இந்த நாட்டைவிட்டே துரத்துவேன்! இது நிச்சயம்!'' என்று கர்ஜித்தார் அவர்.

வாசலில் ஏதோ சலசலப்பு ஏற்பட ஒரு சேவகர் உள்ளே இரைப்புடன் ஓடி வந்தார்.

எல்லோரும் அவரை ஆவலோடு பார்த்தார்கள்.

(தொடரும்)

## தேனியின் குணம்

தாய்மையின் இருப்பிடம் தேனீதான். தன் கூட்டில் ஒரு தேனீக்கு நோய் வந்து விட்டால் அது தானாகவே வெளியேறி இறந்து விடுமாம்.

அப்படிப் போகாவிட்டால் மற்ற தேனீக்கள் எல்லாம் சேர்ந்துகொண்டு அதைக் கொன்று விடுமாம்.

—லலிதா செல்லப்பா.



நாம் அன்றாடம் உபயோகிக்கும் உப்பில் பல உலோகச் சத்துக்கள் உள்ளன. வெள்ளியம், லித்தியம்போன்றவை. டேபிள் சால்ட் என்ற பாடம் செய்த உப்பில் இந்தச் சத்துக்கள் குறைந்து விடுவதால் வெண்மையாய் உள்ளது. சற்று வெண்மைக் குறைவான கல் உப்பே உடம்புக்கு நல்லது.

- எம். கண்ணன்.



# பூஸ்ட் துள்ளித்திரியும் பள்ளிப் பருவத்திற்கு நாள்தோறும் ஈடுகொடுப்பது



உங்கள் மகன் அருந்தும் காலைக் கோப்பை பாலுடன் கலந்துக் கொடுங்கள் சக்தியளிக்கும் பூஸ்ட், நாள்தோறும், காலை தோறும்.

பிறகு பாருங்களேன்! நாள் முழுவதும் அவனே ஒரு அதிவேக ரயில் வண்டி தான்!

காலை ஸ்கூலில் ஆரம்பித்த நேரங்கள், தொடர்ந்து உருண்டு புரண்டு களித்திடும் கால் பந்தாட்டம், பிறகு முழு கவனத்துடன் முடிக்கப்படும் வீட்டுப்பாடங்கள் வரை ...

இதற்கென்றே பூஸ்டின் சக்தி.

உங்கள் மகன் துடிப்புடன், களிப்புடன் ஒவ்வொரு நாளையும் கழிக்க உதவுகிறது.

காலை முதல் இரவு வரை.

பூஸ்ட் புது ஆடைப்பால், பொன்னிற கோதுமை, மால்டெட் பார்லி மற்றும் சுவையான கோககோவை ஒருங்கே சேர்த்து, உங்கள் குழந்தைக்குத்தேவையான சக்தியளிக்கும் கார்போ-ஹைட்ரேட்டுகளையும், திடமான உடற்கட்டிற்கு ப்ரோடீன்களையும் அளிக்கிறது.




**துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் எரிபொருள்.**

8342

கிருத்திகாவும், ராம்சிங்கும் சென்னை விமான நிலையத்தில் இறங்கி, விமான நிலைப் பயணிகள் வண்டியிலேயே சோழா ஓட்டல் வரை வந்தனர். சோழா ஓட்டலையும், மற்றக் கட்டிடங்களையும் பார்த்துக் கொண்டே வந்த ராம்சிங்,

''மதராஸ் இத்தனை பெரிய ஊரா மேம் ஸாப்...?'' என்று கேட்டான்.

''என்ன அப்படிக் கேட்கிறீர்கள் ராம் சிங்...? எங்கள் ஊரைப் பட்டிக்காடு என்று நினைத்தீர்கள்...?''

''இல்லை மேம்ஸாப். ஆனாலும் இவ்வளவு பெரிதாக இருக்கும் என்று நினைக்கவில்லை. இப்போது தானே முதன் முதலாக நான் மதராஸ் வருகிறேன்...''

''அதனால் தான் சொல்கிறேன். முதல் முறையாக வந்திருக்கிறீர்கள். நாலைந்துநாள் தங்கி ஊரைச் சுற்றிப் பார்த்துவிட்டு, மனிதர்களையும் கொஞ்சம் புரிந்துகொண்டு போங்களேன்...''

''செய்யலாம் மேம்ஸாப்... ஆனால் இப்போது தங்குகிற சந்தர்ப்பமில்லையே... அர்ஜுன்ஸாப் ஊரிலில்லை. படா ஸாப் உதவிக்கும் யாருமில்லை. இன்னொரு சந்தர்ப்பம் ஏற்பட்டால் வருகிறேன். நாலைந்து நாட்கள், என்ன, ஒரு மாதம் கூடத் தங்குகிறேன். நீங்களே சுற்றிக் காட்டுங்கள். உரிமையோடு பார்த்து விட்டுப் போகிறேன்...''

ராம்சிங்கின் வார்த்தைகளில் தொனித்த நிஜம் மனத்தைத் தொடக் கிருத்திகா ஒரு முறை புன்னகை செய்து விட்டு மௌனமானாள். எப்படிப் பார்த்துப் பார்த்துப் பொறுக்கி நல்ல இதயங்களாகவே பகவான் அர்ஜுனிடம் சேர்த்திருக்கிறார் என்பதை நினைத்து ஆச்சரியப்பட்டாள். ஒருவேளை அதே நல்ல இதயம் தனக்கும் இருப்பதால் தான் தன்னையும் அர்ஜுனோடு பிணைத்திருக்கிறாரா என்று நினைக்க உடம்பு ஒரு தரம் சிலிர்த்துப் போயிற்று. இந்தப் பிணைப்பு இறுதி வரை இருக்க வேண்டும் என்று தோன்றிற்று. இந்த ஜென்மத்திற்குமட்டும் போதாது. அடுத்த ஜென்மம், அதற்கும் அடுத்தது என்று தொடர வேண்டும் என்று வேண்டிக் கொண்ட போது டாக்ஸி தெருவிற்குள் நுழைந்ததைக் கவனித்து விட்டு வாசலில் நிறுத்தச் சொல்லி இறங்கினாள். டிக்கியிலிருந்து தானே சூட்கேஸைத் தூக்கிக் கொண்டு, ''வாருங்கள் ராம்சிங்...'' என்ற போது பதறிப் போனான் அவன்.

''மேம்ஸாப்... சூட்கேஸை என்கிட்டே கொடுங்கள் மேம்ஸாப்... நீங்கள் தூக்கிக் கொண்டு வருகிறீர்களே...?''

''ஓ... என்ன ராம்சிங். என் சூட்கேஸை நான் தூக்குவதில் ஒரு தப்புமில்லை. வீட்டிற்குள் போகலாம் வாருங்கள்...''

அவள் வராந்தாவில் சூட்கேஸை வைத்து விட்டு அமைதியாகவும் அரை இருட்டிலும் கிடந்த வீட்டின் அழைப்பு மணியை மெதுவாய் நளினமாய் அழுத்தினாள். ஒருமுறை அழுத்தி அரை நிமிடம் காத்திருந்து பதில் எதுவும் வராமற் போகவே மீண்டும் சற்று பலமாக அழுத்த ஹாலின் ட்யூப் விளக்கு எரிந்து உள்ளேயிருந்து நாகத்தின் குரல் கேட்டது.

''யார் அது...?''

''நான்தான் நாகம். கதவைத் திற...''

''யாரு... கிருத்திகாவா...?'' — நாகத்தின் குரல் நம்ப முடியாமலும், சந்தோஷமாகவும் வரப் பதிலுக்கு இவளும் உற்சாகத்துடன் குரல் கொடுத்தாள்.

''நானேதான்... கதவைத் திற...''

கதவைத் திறந்த நாகம்மாள் பரபரவென்று வாசல் விளக்கைப் போட்டாள். பின்னால் நின்ற ராம்சிங்கைப் பார்த்ததும் சற்றுத் தயங்கிக் கொண்டே கேட்டாள்.

''என்ன கீர்த்தி திடீர்னு வந்திருக்கே...?''

''ஏன் வரக் கூடாதா...? வந்தது உனக்குப் பிடிக்கலியா...?''

''இல்லே... இது என்ன பேச்சு கீர்த்தி...? ஒரு லெட்டரோ, தந்தியோ, டெலிபோனில் செய்தியோ இல்லாமல் வந்திருக்கியேன்னு கேட்டேன்...''

# நெருப்பு மலர்

இந்துமதி

திடீர்னு உங்களையெல்லாம் பார்க்கணும்னு தோணித்து. பறந்து வந்துட்டேன்...''

'எப்படி வந்தாய் கீர்த்தி...?''

''அதான் சொன்னேனே, பறந்து வந்தேன்னு...''

''ப்ளேன்லயா வந்தாய்...?''

''ஆமாம். இப்படி நிற்க வச்சே எல்லாக் கேள்விகளும் கேட்கிறதாக உத்தேசமா நாகம்...? கூட இன்னொருத்தரையும் அழைச்சுண்டு வந்திருக்கேனே... உட்காரச் சொல்லிக் காப்பி தரக் கூடாதா?...''

''இதோ உட்காரு குழந்தே... நிமிஷமா காப்பி போட்டுத் தரேன்...''

''ஆமாம்... அம்மா எங்கே.... ஊர்லே இல்லியா....''

''ஆ—ஆமாம்'' – சட்டென்று சமாளித்துக் கொண்ட மாதிரி பேசினாள் நாகம்.

''இன்னிக்கு வந்துடுவாள்...''

''இதற்கு மேலா வரப் போகிறாள்...? எந்த ஊருக்குப் போயிருக்கிறாள்...''

''அ...து... அதெல்லாம் எனக்கு எப்படி தெரியும் கீர்த்தி... போகிற ஊரையெல்லாம் சொல்லி விட்டா போக முடியும்... பேசிண்டே போறேன் பார். இரு காப்பி கொண்டு வரேன்...''

கிருத்திகா நாகத்தின் தயக்கமான பேச்சையும், தடுமாற்றத்தையும் கவனித்தாள். ஏன் இப்படித் தடுமாறுகிறாள் என்று யோசித்தாள். இவளிடம் சொல்லாமல் அம்மா வெளியூர் போக மாட்டாள். நிச்சயம் இவள் எதையோ மறைக்கிறாள். என்ன அது...

எதுவானாலும் கேட்கக் கூடாது. தானாகத் தெரிகிற 'போது தெரியட்டும். தூண்டித் தூண்டிக் கேட்கிற விஷயமெல்லாம் அர்ஜுனுக்குப் பிடிக்காது. எதையும் வலியப்போய்க் கேட்டுத் தெரி'து கொள்ள இஷ்டப்பட மாட்டான். பெண்களைக் குறைவாகப் பேசமாட்டான். தங்களை விடத் தாழ்ந்தவர்கள் என்று நினைக்க மாட்டான். அதே போல் இருக்கப் பழகிக்கொள்ள வேண்டும் என்று



நினைத்த அவள் ராம்சிங்கை உட்காரச் சொல்லி எதிர் சோபாவில் உட்கார்ந்து கொண்டாள்.

''அம்மாவை அறிமுகப்படுத்த முடியாது போலிருக்கிறது ராம்சிங். அவள் ஊரிலில்லை. இதோ இந்த போட்டோவில் என்னுடன் இருப்பவர்தான் அம்மா...''

ஹாலில் மாட்டியிருக்க அந்தப் புகைப் படத்தைக் காட்டிய போது அவனுக்கு விஷ்ணுபிரசாத் காட்டிய புகைப்படங்கள் ஞாபகத்திற்கு வந்து மீண்டும் நெஞ்சில் லேசாய் வெறுப்புப் படர்ந்தது; அம்மாவைப் பற்றிப் பேசப் பிடிக்காமற் போயிற்று.

''அம்மா பாட்டு பாடுகிறவர்களா மேம் ஸாப். மற்ற புகைப்படங்களைப் பார்த்தால் அப்படித் தெரிகிறதே....''

''ஆமாம். ஒரு பிரபலமான டான்ஸ ருக்குப் பின்னணி பாடுகிறாள்.'' என்று ஹிருத்திகா அம்மாவைப் பற்றிய பேச்சை அதோடு கத்தரிக்க நினைத்தாள்.

காப்பி சாப்பிட்ட பிறகு, ராம்சிங்கிற்கு வீட்டைச் சுற்றிக் காண்பித்தாள். இரவு சாப்பிடுகிறபோது லேசாய்த் தங்கள் குடும் பம் பற்றிக் கோடி காட்டினாள். சின்ன வயதி லேயே அப்பா செத்துப் போனது. உற வினர்கள் கைவிட்டது. அம்மா இடமாக நின்று காப்பாற்றியது. நாகத்தைத் துணைக் குக் கூட்டிக்கொண்டு வந்தது...''

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டே ராம்சிங் திருப்திகரமாகச் சாப்பிட்டு முடித் தான். ஒரு டம்ளரில் ரஸம் வாங்கிக் குடித் தான்.

''சமையல் ரொம்ப நன்றாக இருந்தது'' என்பதை நாகத்திடம் சொன்னான்.

அதைக் கேட்டு அவள் நெகிழ்ந்த குரலில் சொன்னாள்.

''இதில் நன்றாக இருக்க என்ன இருக்கு..? பருப்பும், வடையும் பாயசமுமா பண்ணி னேன்...?''

''என்ன...? என்ன சொல்கிறார்கள் அவர்கள்...?''

''ஒன்றுமில்லை... இது என்ன சமையல், இன்னும் நன்றாகச் செய்திருக்கலாம்...'' என்கிறார்கள் என்று ஹிருத்திகா மொழி பெயர்த்ததும் அவன் ''ஓ... இதுவே அதிகம் பஹுத் ஷுக்ரியா மாஜி...'' என்று கைகூப்பினான்.

''படுத்துக் கொள்கிறீர்களா ராம்சிங். டில்லி ஃப்ளைட் காலை ஆறு மணிக்கு. நாம் இங்கிருந்து நாலு. நாலேகாலுக்குக் கிளம்பி னால் தான் சரியாக இருக்கும்...''

''அப்படியானால் படுத்துக் கொண்டு விடுகிறேன் மேம்ஸாப். ரொம்ப களைப்பாக இருக்கிறது...''

கீழே விருந்தினருக்கான அறையின் படுக் கையைத் தட்டிப்போட்டு, காலை நாலு மணிக்கெல்லாம் எழுந்து காப்பி போடச் சொல்லி நாகத்திடம் தெரிவித்துவிட்டு, தன் அறைக்குப் படுக்கப் போனாள். படுத்து அந்த அரையிருட்டில் சுழலுகிற மின் சார விசிறியைப் பார்த்துக் கொண்டிருந்த போது அர்ஜுன் என்ன செய்கிறானோ... என்று தோன்றிற்று. இத்தனை நேரம் அனேகமாகப் பஞ்சாப் போய்ச் சேர்ந்திருக்க லாம். அங்கு போய் என்ன செய் வார்கள்...?

சில நாட்களாகப் பஞ்சாப் பற்றிய பிரச் சினையை இவளும் செய்தித் தாள்களில் படித்துக் கொண்டு தான் வருகிறாள். சீக்கி யர்களே நிறைந்த இடமானதாலும், அவர் களின் பொற்கோவில் அங்கு இருப்பதாலும் கோவிலுக்குள் இருந்து கொண்டு வன் முறைச் சம்பவங்களில் ஈடுபடுகிறார்கள். இந்துக்களைச் சுடுகிறார்கள். பொற்கோவிலுக் குள் பிரார்த்தனைக்கு வந்த ஒரு உயர் போலீஸ் அதிகாரியை அங்கேயே சுட்டுக் கொன்றிருக்கிறார்கள். இதையெல்லாம் பார்க் கிற போது கோவில் வெறும் கோவிலாகப் பிரார்த்தனை செய்கிற இடமாக மட்டுமே செயல்படுகிறதா என்கிற சந்தேகமே வரு கிறது. வன்முறைகளும், துப்பாக்கிப் பிர யோகங்களும் அதிகமாகி, பொதுமக்கள் மிகுந்த பாதிப்புக்களுக்கு உள்ளாகிற இந்தச் சந்தர்ப்பத்திலும் மௌனமாக இருக்க முடி யாது தான். காலிஸ்தான் என்று தங்கள் இயக்கத்திற்குப் பெயர் சூட்டி அவர்கள் தனி நாடு கேட்பதை ஒப்புக் கொள்ள முடி யாது. அதன் தலைவர் பிந்தரான் வாலேயை ஆதரிக்க முடியாது.

இன்று இவர்கள் தனி நாடு கேட் பார்கள். பின், இவர்களைப் பின்பற்றி மொழி வாரியாக, இன வாரியாகத் தனித் தனி நாடுகள் கேட்கப்படும். அப்புறம் இந்தியா என்கிற பழமை மிகுந்த பெருமை யான புராதன தேசத்தை எங்கிருந்து பார்க்க இயலும் ..? பாரதம் என்று சொல்லக் கூடிய வாய்ப்பு எப்படி இருக் கும்...? துண்டு துண்டாகப் பிளவுபடவா இந்த வன்முறைகள்?... மொழிவித்தியாசம் இன வித்தியாசம், சமய வித்தியாசம், கலாச்சார வித்தியாசம் என்று அத்தனை வித்தியாசங்களுக்கிடையிலும் 'சண்டையிட்



''நட்ட நடுநிசி. டோக்கியோ நகரத்தில் சில ஜப்பானிய நண்பர்களுடன் ஒரு தெருவைக் குறுக்கே கடக்க நேர்ந்தது. வீதியில் ஒருவிதமான போக்குவரத்தும் இல்லை. ஆனால் [illegible] விளக்குகள் மட்டும் எரிந்து கொண்டிருந்தன. ஒரு நிமிடத்திற்கு மேல், பச்சை விளக்கு வரும் வரை காத்திருந்து, ஜப்பானிய நண்பர்கள் தெருவைக் குறுக்கே கடந்து என்னையும் அழைத்துச் சென்றனர். தெருவில் ஒரு சிறிய வாகனமும் காணப்படாத அந்த நடுநிசியிலும், ஒருவராவது சிவப்பு விளக்கு எரிகையில் தெருவைக் கடக்க முயற்சி செய்யாதது என்னை மிகவும் வியப்படையச் செய்தது'' என்கிறார் ஜெய் முபாரக்ஷி இந்தியா டுடே பத்திரிகையில்.

தகவல்: ஜீயபுரம். என். ராமமூர்த்தி.

டாலும் நாம் சகோதரர் அன்றோ...' என்று பாரதியார் பாடிய மாதிரி ஒற்றுமையாக இருந்து வந்திருக்கிறோம். இதில் பிரிவினை மனப்பான்மை வந்ததே தவறு... அதை முளையிலேயே கத்தரித்திருக்க வேண்டும். அப்படிச் செய்ய இயலாமல் அவர்கள் வழிபாடு நடத்துகிற இடத்திலிருந்து தங்கள் இயக்கத்தை நடத்தின காரணத்தாலேயே பிரதமர் பொறுமையாய் இருந்திருக்கிறார். அந்த மதத்தைச்சார்ந்தவர்களின் மனத்தைப் புண்படுத்தக் கூடாது என்றிருந்திருக்கிறார்.

ஆனால் இதற்கு மேலும், இந்தக் கொலையாளுக்குப் பின்னரும் பொறுப்பதில் அர்த்தமில்லை என்றே செயல்படத் துவங்கியிருக்கிறார். இந்தியாவைப் போல், மொழி, ஜாதி, சமய வித்தியாசமுள்ள ஒருநாட்டை ஆள்வது சுலபமான விஷயமல்ல.

'ஓ... ஷி இஸ் வெரி கிரேட்....' பிரதமர் இந்திராகாந்தியின் மீது அவனுக்கு இருந்த மதிப்பும் மரியாதையும், அன்பும், பாசமும் இன்னும் அதிகமாக அந்தப் பிரதமரின் கட்டளையைக் காக்க அர்ஜுன் புறப்பட்டிருப்பதில் ஒரு பெருமிதம் ஏற்பட்டது. சந்தோஷமாகக் கூட இருந்தது. தேசத்தைக் காப்பதில் சடுகளவு பங்கு வகிக்கிற ஒருவனின் மனைவி என்பதில் இதம் இருந்தது...

அந்த இதத்துடன் கண்களை மூடியவள், நாகம் வந்து எழுப்பிய போது தான் விழித்தாள்.

''மணி நாலாயிடுத்து கிருத்திகா... எழுப்பச் சொன்னாயே...?''

''நாலாயிடுத்தா...? ராம்சிங்கை எழுப்பினாயா நாகம்...?''

''அவர் எப்போதோ எழுந்து குளித்துத் தயாராகக் காத்துக் கொண்டிருக்கிறார்.''

''இதோ ஒரே நிமிஷத்தில் கீழே வருகிறேன். காப்பி கலை...''

முகம் கழுவி உடை மாற்றிக் கொண்டு கீழே வந்து ராம்சிங்கின் 'குட்மார்னிங் மேம்சாப்'பிற்குப்பதில் குட்மார்னிங்சொல்லி, காப்பி குடித்து முடித்து.

''கார் சாவியைக் கொடு நாகம். நான் இவரை ஏர்போர்ட்டில், விட்டுவிட்டு வருகிறேன்...'' என்றதும் நாகம் விழித்தாள். ஒரு விநாடி தயங்கிப் பின் சொன்னாள்...

''கார் இல்லை கிர்த்தி. அம்மா எடுத்துண்டு போயிருக்கா...''

''அம்மா எடுத்துண்டு போயிருக்காளா..? காரையா...? கச்சேரிக்கு அம்மா காரில் போகிற வழக்கமில்லையே...? அப்படியானால் கச்சேரிக்குப் போகவில்லையா...? வேறு எங்கு போயிருக்கிறாள்...?''

கேட்டதும் நாகம் மீண்டும் தயங்கிப் பதில் சொன்னாள்.

''மகாபலிபுரம் போயிருக்கிறாள். நேற்று மத்தியானம் தான் கிளம்பினாள். இன்னிக்கு காலை 11 மணிக்கெல்லாம் வந்து விடுவதாகச் சொன்னாள்.''

''யாரோடு போயிருக்கிறாள்...?''

''.....''

''சொல்லு நாகம். யாரோடு போனாள்.?''

''யாரோ விஷ்ணுபிரசாத்துன்னு ஒருத்தர் டில்லியிலிருந்து நேற்று வந்தார். அவரோட போயிருக்கிறாள்...''

கிருத்திகா சட்டென்று முகம் தணலாக ஜொலிக்கக் கீழ் உதட்டைக் கடித்துக்கொண்டாள். உள்ளுக்குள் மீண்டும் அக்கினி பற்றிக் கொள்ள, ''என்ன ஆச்சு மேம் சாப்....'' என்ற ராம்சிங்கின் கேள்விக்கு ''ஒன்றுமில்லை. வாருங்கள். டாக்ஸியில் போகலாம்...'' என்று சொல்லி வெளியில் வந்தபோதே மனத்துக்குள் ஒரு முடிவுக்கு வந்திருந்தாள் அவள்...

(தொடரும்)

# ஒரு நிஜமான பொம்மை

**மாத்தளை சோமு**

**வா**சல் கதவைத் திறந்து கொண்டு வீட்டை விட்டு வெளியே வந்த ராணி சிறிது நேரம் மௌனமாக நின்று, தூரத்தில் முற்றத்தில் விளையாடுபவர்களை ஏக்கத்துடன் பார்த்துவிட்டு மீண்டும் கதவை லேசாகத் திறந்து, உள்ளே, 'அம்மா என்ன செய்கிறாள்' என்று பார்த்தாள். அம்மா குசினியில் (அடுக்களை) வேலை செய்து கொண்டிருந்தாள். இப்போதைக்கு அவள் வெளியே வரமாட்டாள். குசினி வேலை அல்லவா? அது அனுமார் வால் போல் நீண்டு கொண்டே அல்லவா போகும்?

அம்மா வருவதற்குள் ஆசை தீர விளையாடலாம் என்ற எண்ணத்துடன் கதவை மெதுவாகச் சாத்திவிட்டு அந்த முற்றத்தை நோக்கி நடந்தாள். முற்றத்தில் கலாவும் தேவியும் ஒரு பாயில் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் அங்கே விளையாடிக் கொண்டிருந்தார்கள். ராணியின் மனத்தில் அம்மா நினைவு வந்தது. அம்மா விளையாடாதே என்று சொல்லிக் கொண்டிருப்பாள். ஆனால் அவள் அந்த அம்மாவுக்குத் தெரியாமல் கொஞ்ச நேரமாவது விளையாடுவாள்.

அதே முற்றத்துக்கு ராணி வந்தாள். அவளைக் கண்டதும் கலாவும் தேவியும் சிரித்தவாறு, 'வா... ராணி... வா' என்று ஏகக் குரலில் வரவேற்றார்கள். ராணி பதில் சிரிப்பைக் கொடுத்துவிட்டு, ''அம்மா குசினியில்...விளையாடுவோமா'' என்று கேட்டாள். தேவி அதற்கு, ''விளையாடுவோம்...கொஞ்சம் இரு, எங்க அப்பா வாங்கித் தந்த புதுப் பொம்மையைக் காட்டுறேன்'' என்றவாறே பாயில் குவிந்து கிடந்த பொம்மைக் குவியலில் அந்தப் புதுப் பொம்மையைத் தேடி எடுத்து ராணியிடம் கொடுத்தாள்.

''பாரு ராணி... புதுப் பொம்மை!''

ராணி ஆசையுடனும் ஆர்வத்துடனும் அந்தப் பொம்மையை வாங்கிப் பார்த்துவிட்டு ''நல்லா இருக்கு'' என்று புகழ்ந்தவாறு திருப்பிக் கொடுத்தாள். தேவி அதை வாங்கி அந்தப் பாயிலிருந்த பொம்மைகளோடு வைத்தாள்.

ராணி அந்தப் பொம்மைகளையே பார்த்தாள். அங்கே வித விதமான பொம்மைகள் இருந்தன. கையாட்டும் குழந்தை, தலையாட்டும் யானை, சிகரெட் பிடிக்கும் துரை, தாவும் குதிரை, தப்படிக்கும் குரங்கு... அடேயப்பா எத்தனை விதமான பொம்மைகள்! ஒரு பொம்மை உலகமே அங்கே இருந்தது. அவைகளை ஆசையோடும் உள்ளத்தில் கொந்தளிக்கிற ஏக்கத்தோடும் பார்த்தபோது அவள் உள்ளத்தில் கவலைதான் இப்போது வந்தது.







பொம்மை உலகமே வைத்திருப்பவர்கள் பெரிய பணக்காரர்கள். அவர்களிடம் பொம்மைக் காரும் உண்டு, நிஜக் காரும் உண்டு. இரண்டும் ஓடும். ஆனால் அவளிடம் ஓடாத பொம்மைக் கார்கூட இல்லை. அதை வாங்கப் பணம் ஏது? அவளுடைய அப்பா ஒரு கடையில் மாதச் சம்பளத்தில் வேலை செய்கிறார். காலையில் ஆறு மணிக்குப்போனால் இரவு எட்டு மணிக்குத்தான் சில நேரம் எட்டு மணிக்கு மேல்தான் வருவார். வரும் போது சமைக்க அரிசி, பருப்பு காய்கறிதான்

வாங்கி வருவார். எப்போதாவது ஸ்பெஷலாக பிஸ்கட் வாங்கி வருவார். இதைத் தவிர வேறு எதுவும் வாங்கி வரச் சம்பளம் போதாதாம் அவருக்கு.

கீழே பாயில் உட்கார்ந்திருந்த தேவி எழும்பி நின்று, 'என்னவிளையாட்டு விளையாடுவோம்?' என்று கலாவிடமும் ராணியிடமும் கேட்டாள். அவர்கள் வெவ்வேறு விளையாட்டைச் சொன்னார்கள். ராணி, 'ஓடிப் பிடித்து விளையாடுவோம்' என்றாள். கடைசியில் அவள் சொன்னதையே மற்ற இருவரும் ஏற்றுக்கொண்டு அவளையே கண் மூடவும் சொல்லிவிட்டார்கள். அவளும் அதற்குச் சம்மதித்தாள்.

ராணி இப்போது தன் கண்களை மூடிக்கொண்டு நின்றாள். அவர்கள் இரண்டுபேரும் ஒளிந்துகொள்ள இடம் தேடி ஓடினார்கள். கலா திரும்பித்திரும்பிப்பார்த்தவாறு கடைசியாக ஓடினாள். சிறிது நேரத்தில் 'ரெடி' என்று ஒரு சத்தம் கேட்டது. ராணி கண்களைத் திறந்து பார்த்தாள். அங்கே ஒருத்தரையும் காணவில்லை. அவர்கள் எங்கோ ஒளிந்து விட்டார்கள். அவர்களை இனி அவள்தான் கண்டுபிடிக்க வேண்டும். அப்போதுதான் விளையாட்டில் வெற்றி கிடைக்கும். அவர்கள் அதற்குள் எங்கே ஒளிந்திருப்பார்கள்? முற்றத்தில் ஒளிய இடமே இல்லை. சிலவேளை அவரவர் வீடுகளில் ஒளிந்திருக்கலாம்.

தேவியின் அந்தப் பெரிய பங்களாவை நோக்கி ராணி ஓடினாள். அந்தப் பங்களாவின் வாசலருகே போனதும் சற்று நேரம் அப்படியே நின்று மேலும் கீழுமாகப் பங்களாவைப் பார்த்தாள். அடேயப்பா எத்தனை பெரிய பங்களா? ஒரு மாளிகையைப் போல இருக்கிறது?

ராணிக்கு இப்போது தன் வீட்டின் நினைவு வந்தது. ஓ அவளுடைய வீடா அது? அதைக் குடிசை யென்றும் சொல்ல முடியாது. வீடென்றும் சொல்ல முடியாது. அத்தகைய உருவத்தில்தான் அது இருக்கிறது. அதில்தான் அவள் இருக்கிறாள். அவள் வீடு தேவியின் பங்களாவுக்கும் கலாவின் பங்களாவுக்கும் இடையில் இரண்டு நெட்டையனுக்கு நடுவில் ஒரு குட்டையனைப் போல் இருக்கிறது.

பங்களாவின் வாசலில் கதவு திறந்தே இருந்தது. உள்ளே ஒருத்தரும் இல்லை. ராணி தயங்கித் தயங்கி உள்ளே போனாள். அப்படியே மெல்லமெல்ல அடுத்த அறைக்குப் போனாள். அங்கேயும் ஒருத்தரும் இல்லை. அதன் பின் அதற்கு அடுத்த அறை... அப்படியே அவள் குசினிக்கே போய்விட்டாள். இதற்கு முன் அவள் அந்தப் பங்களாவின் உள்ளே வந்ததே இல்லை. வாசலில் வந்து பார்த்ததோடு சரி. இன்று குசினிவரை கால் வைத்திருக்கிறாள். அதுவும் தேவியைத் தேடி..

குசினிக் கதவு சாடையாகத்திறந்து வைக்கப்பட்டிருந்தது. ராணி உள்ளே எட்டிப் பார்த்தாள். ஓ அந்தக் குசினி எவ்வளவு அழகாக இருக்கிறது? உள்ளே தேவியின் அம்மாவோடு தேவி பேசிக் கொண்டிருந்தாள்.

''பிஸ்கட் தாங்கம்மா... விளையாடப் போவனும்...''

''ஒன்னோட பெரிய தொந்தரவு!...பிஸ்கட் சாப்பிட இதா நேரம்? சரிசரி வா தரேன்.'' என்று சொன்ன தேவியின் அம்மா குசினியை விட்டு வெளியே வந்தாள். அவளின் பின்னே தேவியும் வந்தாள். ராணி தன்னை மறந்து 'தேவியைக் கண்டு பிடிச்சிட்டேன் கண்டு பிடிச்சிட்டேன் ' என்று குதித்தாள்.

தேவியின் அம்மா 'இவள் எப்படி உள்ளே வந்தாள்?' என்ற நினைவு நெஞ்சில் கழிபோட அதட்டினாள். ''சத்தம் போடாதே. யார் உன்னை வீட்டுக்குள்ளே வரச் சொன்னது? மொதல்ல வெளியே போ... போ ''

ராணிக்குத் 'திக்'கென்றது. அந்த வீட்டுக்குள் வரக் கூடாதாம் ஏன்? அவளுக்குப் புரியவே இல்லை. எப்படிப் புரியும்? பணத்தாலும் சாதியாலும் பிரிவுகள் வகுத்து வைத்திருக்கும் இந்தச் சமுதாயத்தில் அவள் ஓர் ஏழை வீட்டில் பிறந்த மழலைச் செல்வம். அவளுக்குப் புரியுமா இந்தப் பேத உணர்வுகள்?

விறுவிறுவென்று அந்தப் பங்களாவை விட்டு வெளியே வந்தாள் ராணி. வாசலிலேயே இருந்தாள். சிறிது நேரத்தில் தேவி வெளியே வந்தாள். அப்போது அவளை



ராணி 'லபக்' என்று பிடித்துக் கொண்டாள். தேவி அதை ஏற்கவில்லை. 'நீயா புடிச்சே? நானுத்தானே வந்தேன்?'

ராணி அவளை மடக்கினாள். "நானே புடிச்சிருப்பேன். வீட்டுக்குள்ளேயும் வந்தேன். ஒங்க அம்மாதான் இங்க ஏன் வந்தேன்னு கேட்டாங்களே? அதான் நான் வெளியே வந்துட்டேன். அப்புறம் வெளியே வந்த உன்னைப் புடிச்சுட்டேன். சரியா?" தேவி தலையசைத்தாள். ராணி அவளிடம் "நீ இங்கேயே இரு. நான் கலாவைக் கண்டு புடிச்சிட்டு வரேன்" என்று சொல்லிவிட்டு, கலாவின் பங்களாவை நோக்கி ஓடினாள்.

கலாவின் பங்களாவில் வாசல் கதவு திறந்தே இருந்தது. ராணி உள்ளே போனாள். உள்ளே ஒருத்தரும் இல்லை. அடுத்தடுத்த அறைகளுக்கும் போனாள். ஓர் அறையில் கலா இருந்தாள். ராணி மெதுவாக அவள் பின்பக்கம் போய் அவளைப் பிடித்துக்கொண்டு, 'கண்டு புடிச்சிட்டேன்.' 'கண்டு புடிச்சிட்டேன்' என்று சத்தம் போட்டாள். இந்தச் சத்தத்தைக் கேட்டு வெளியே வந்த கலாவின் அம்மா ராணியை முறைத்துப் பார்த்தாள். "நீயா... இங்க ஏன் வந்தே? ஒளிஞ்சு வெளையாட இந்த வீடுதான் கெடைச்சுச்சா? போ வெளியே போ."

ராணியின் முகம் கருங்கியது. தேவியின், அம்மாவும் இப்படித்தான் விரட்டினாள். இப்போது கலாவின் அம்மாவும் அப்படித்தான் விரட்டுகிறாள். ஏன்? அவளுக்கு எதுவுமே புரியவில்லை. அம்மா சொன்னது மட்டும் நினைவுக்கு வந்தது. அவர்கள் பணக்காரர்கள்... நாம் ஏழைகள்...

ராணி வெளியே வந்தாள். தன் வீட்டை நோக்கி நடந்தாள். நடந்ததை அம்மாவிடம் சொன்னால்? அம்மா அவள் முதுகில் இரண்டு போட்டு அடிப்பாள். 'ஒன்னை யாரு அங்க போகச் சொன்னா? அவங்க பணக்காரங்க... நாம பிச்சைக்காரங்க. நம்மை அவங்களுக்குப் பிடிக்குமா?'

தன் மன உணர்வுகளைக் கட்டுப்படுத்திக் கொண்ட ராணி மௌனமாகப் பொய்யான புன்னகையை முகத்தில் மலரவிட்டவாறு தன் வீட்டை நோக்கிப் போனாள்.

மறுநாள்.

வழக்கம்போல் முற்றத்தில் விளையாட ராணி வந்தாள். முற்றத்தில் ஒருத்தரையும் காணவில்லை. தேவி, கலா அவர்கள் எங்கே போயிருப்பார்களோ என்றுயோசித்துவிட்டுக் கலாவின் பங்களா அருகே போய்ப் பார்த்தாள். உள்ளே கால் வைக்கவில்லை. தன் கண்களை மட்டும் உள்ளே விட்டுத் தேடினாள். ஒருத்தரும் இல்லை. இங்கேதான் இப்படி. தேவியின் பங்களாவில் எப்படியோ? அங்கேயும் போய்ப் பார்த்தாள். யாருமே கண்களில் படவில்லை. ராணி முற்றத்திலேயே நின்று கொண்டிருந்தாள். அப்போது தேவியின் பங்களா வேலைக்காரன் வந்தான்.

"வெளையாட யாருமே வரலியா?" ராணி தான் கேட்டாள். "இன்னைக்கி தேவியின்



"உங்க பையன் ஒரே சமயத்தில் பதினெட்டு மொழி கத்துக்கிட்டிருந்தானே. அவன் இப்ப என்ன பண்றான்?"
"அதை ஏன் கேக்கறீங்க. நாங்க வீட்டில் தமிழ் பேசறதைப் பார்த்துப் பேந்த பேந்த முழிக்கிறான்."

பர்த்டே பார்ட்டி. சொல்லலியா ராணி? மத்த எல்லாத்துக்கும் சொல்லியிருக்காங்க."

பங்களா வேலைக்காரன் போனான்.

ராணிக்குக் கவலையாக இருந்தது. பர்த்டே பார்ட்டி என்றால் விதவிதமான இனிப்புப் பண்டங்கள் இருக்கும். சாப்பிடச் சாப்பிட ருசியாக இருக்கும். அவைகள்... தேவி பர்த்டேக்கு, சொல்லவே இல்லையே. வெளையாட வந்தால் 'ராணி, ராணி' என்று அவளோடு ஒட்டிக்கொள்வாள். ஒரு நாள் போகாவிட்டால் கேள்வி மேல் கேள்வி கேட்பாள். அவளா பர்த்டே பார்ட்டியென்றதும் மறந்துவிட்டாள்? அவளுக்கு இப்போது அம்மா சொன்னது ஞாபகத்துக்கு வந்தது. 'உம்... அவங்க பணக்காரங்க. நாம ஏழைங்க'

ராணி ஒருத்தருக்கும் தெரியாமல் பர்த்டேயைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப் பட்டாள். உள்ளே இருந்து இசைச் சத்தம் வேறு வெளியே வந்து அவள் ஆசையைத் தூண்டியது.

அந்த இசை மாடியிலிருந்து வருவதை அவளால் உணர முடிந்தது. சுற்றும் முற்றும் பார்த்தாள் ராணி. ஒருத்தரும் இல்லை. அந்த அறையில் இருந்த மாடிப் படிகளில் மெல்ல மெல்ல ஏறினாள். மாடிக்குப் போவதற்குக் கொஞ்சம் படிகள் இருக்கும்போது அதற்கு மேல் ஏறாமல், அப்படியே நின்று உள்ளே நடப்பதை எட்டிப் பார்த்தாள்.

உள்ளே ஒரு மேஜையைச் சுற்றி ஒரு சிறிய கூட்டம் கூடியிருந்தது.

மேஜைக்கு மேலே கூரைக்குக் கீழே அழகான வர்ணக் காகிதங்கள் வெவ்வேறு ரூபங்களில் உருமாறித் தொங்கிக் கொண்டிருந்தன. அதனிடையே பந்தலில் இருக்கும் பூசணிக்காய் போல் பருத்துக் காற்றில் ஆடி அசையும் பலவிதமான கலர் பலூன்கள், சிறிய நட்சத்திரங்கள் போல் மின்னும் கலர் பல்புகள். டேப் ரிக்கார்டரிலிருந்து மிதந்து

# வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.

# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே
சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும்,
பற்சிதைவையும் உண்டாக்கும்
பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும்
நுரை ஆழ ஊடுருவிச் சென்று,
துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத்
துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும்
பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல்
துலக்குவதால் புத்துணர்ச்சி தரும்
தூய சுவாசமும், வலிமை மிகுந்த
ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




*கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்*
*பெப்பர்மெண்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !*

வருகிற இனிய இசை: இவையெல்லாம் ஒரு கல்யாண வீட்டை நினைவுபடுத்தின.

ராணி அந்தக் கட்டடத்தில் தேவியைத் தேடினாள். ஓ! தேவி..., அவள் பழைய கதைப் புத்தகத்தில் எப்போதோ பார்த்த குழந்தைத் தேவதை போல் இருந்தாள். அவளுக்கு இரு பக்கத்திலும் அப்பாவும் அம்மாவும், இன்னும் சிலரும் வந்திருந்தார்கள். அந்த மேஜையில் விதவிதமான பலகாரங்கள் கேக்குகள், பிஸ்கட்டுகள், அழகான தட்டுக்களில் வைக்கப்பட்டிருந்தன. ஒரு பெரிய கேக்கில் மெழுகுவர்த்திகள் எரிந்துகொண்டிருந்தன.

ராணி தன்னை மறந்து நின்று கொண்டிருந்தாள். அவள் மனத்தில் பழைய நினைவு ஒன்று மோதியது.

''எனக்கு எப்பம்மா பர்த்டே வருது?'' அம்மாவிடம் ராணி கேட்டாள்.

'ஒனக்குத்தான் வருடா வருடம் வருதே!'

'ஏன் கொண்டாடலே?'

'பர்த்டே எல்லாம் கொண்டாட நாம பணக்காரங்க இல்லே.'

தேவதைபோல் இருக்கும் தேவியைப் பார்த்த ராணி இதற்கு மேலும் அங்கே இருந்தால் சரியல்ல என்ற நினைவு உந்த மாடிப்படிகளிலிருந்து இறங்கி, தன் வீட்டை நோக்கி நடந்து போனாள்.

அன்றிரவு....

வேலை முடிந்து வீட்டுக்கு வந்த அப்பாவைச் சோகத்தோடு பார்த்தாள் ராணி.

அப்பா முகத்தில் இன்று ஒரு நாளுமில்லாத மகிழ்ச்சி ததும்பியது. அவரின் இரண்டு கைகளிலும் இரண்டு பைகள் இருந்தன. ஒன்று வழக்கமான அரிசி பருப்பு காய்கறி, சுமந்து வருகிற பை. மற்றது? ''ராணி! ஒரு மாதிரியா இருக்கே? ஒனக்கு இன்னிக்கு கேக், பிஸ்கட், பலகாரம் கொண்டுவந்திருக்கேன்... சாப்பிடு!''

''கேக்கா? எனக்கா?''

ராணிக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. பர்த்டே பார்ட்டி அவள் நினைவில் வந்து நின்றது. சீ... பர்த்டே பார்ட்டி கொண்டாடாமலே கேக் வந்திருக்கே!

அப்போது ராணியின் அம்மா கேட்டாள்: ''கேக் பிஸ்கட் ஏது? கடையில் வாங்கினதா?''

''கடையிலா? கடையில வாங்க நம்மகிட்ட ஏது காசு? இது வேலை முடிஞ்சு வந்த நேரம் தேவி அப்பா கூப்பிட்டு இன்னைக்கு நம்ம தேவி பர்த்டே இந்த கேக், பிஸ்கட்டை ஒன் மக ராணிகிட்ட குடுன்னு சொல்லி எனகிட்டக் கொடுத்ததும். சாப்பிடு ராணி.''

ராணியின் முகம் சுருங்கியது. ஓகோ! அவர்கள் கொடுத்த கேக், பிஸ்கட்டா?.... மிஞ்சிப்போயிருக்கும். அதை ரொம்பவும் பெரிய அன்புடன் கொடுத்திருக்கிறார்கள்... அப்பாவும் வாங்கிவந்துவிட்டாரே.

''கேக் எனக்கு வேணாம்...''

''ஏன்?'' — அப்பா கேட்டார்.

ராணி இக்கித் இக்கிச் சொன்னாள்:... ''அவங்க பணக்காரங்க. பெரிய பங்களா இருக்கு. நாம்ப பிச்சைக்காரங்க... சின்ன வீட்டில இருக்கோம். அவங்க புள்ளைகளோட வெளியில் வெளையாடலாம். ஆனால் அந்தப் பங்களாவுக்குப் போகக் கூடாதாம். நேத்து ஓடிப் புடிச்சு விளையாடற நேரம் அவுங்க பங்களாவுக்குப் போனேன். ஒடனே தேவி அம்மாவும் கலா அம்மாவும் இங்க ஏன் வந்தேன்னு கேட்டாங்க. இன்னிக்கு காலையில தேவிக்குப் பர்த்டே. அவங்க மாதிரி பெரிய பணக்காரங்களை மட்டும் கூப்பிட்டு இருக்காங்க, என்னைக் கூப்பிடவே இல்லே. நான் சின்ன வீட்டில இருக்கிறேனும். நீங்க வேணும்னுச் சாப்பிடுங்க. என்னைக் கூப்பிடாதவங்க கேக், பிஸ்கட் சாப்பிடணுமா?''

பொம்மையுடன் விளையாடினாலும் ராணி பொம்மையல்ல! ராணியின் கன்னத்தில் ராணியின் அம்மா அடுத்தடுத்து முத்தம் கொடுத்தாள். அதைப் பார்த்ததும் ராணியின் அப்பாவுக்கு வந்ததே கோபம்...

''ராணி ஒனக்கு மட்டும்தான் பொறந்த புள்ளைன்னு நெனைச்சியா? எனக்கில்லையா?'' என்று சத்தம் போட்டுச் சொல்லிவிட்டு, தம் கையில் இருந்த பையோடு வெளியே போனார். அவர் திரும்பி வந்தபோது கையிலிருந்த அந்தப் பையைக் காணவில்லை.

''கேக், பிஸ்கட் இருந்த பையை என்னப்பா செஞ்சீங்க?'' — ராணி கேட்டாள்.

''வெளியே வீசிட்டேன். நம்மை மதிக்காதவங்க கேக், பிஸ்கட் நமக்கெதுக்கு?'' என்று சொன்ன ராணியின் அப்பா ராணியைத் தூக்கிக் கொஞ்சி முத்தமிட்டார்.

---

● நான் சந்திக்கும் ஒவ்வொரு மனிதனும் ஏதோ ஒரு விஷயத்தில் என்னை விட உயர்ந்தவனாகவே இருக்கிறான். அந்த விஷயத்தை நான் அவனிடம் கற்றுக் கொள்கிறேன். —எமர்சன்.

● பேச்சு சுதந்திரம் ஒரு பலமான பாதுகாப்பாகும். ஏனெனில் முட்டாளுக்குக் கூட பேச்சு சுதந்திரம் கொடுத்து, பேச வைத்து, அவனை முட்டாள் என்பதை உலகுக்கு விளம்பரப்படுத்தி விடலாமே!

—உட்ரோவில்சன். (படம்)

தொகுப்பு: திருச்செங்கோடு ப.கந்தசாமி



**வே**தாளம் சொல்லியிருந்த அடுத்த வாரம் கண்ணை மூடித் திறப்பதற்குள் கத வருகில் வந்து நின்று சலாம் போட்டது. வேதாளம் வெகு அமர்க்களமாக வந்திருந்தது.

''என்ன ஒரே குஷியாய் இருக்கிறாய் போலிருக்கிறது?''

''இல்லேயா பின்னே? இந்த வார இரண்டு படங்களும் அவ்வளவாக உறுத்தவில்லை என்று மஹாஜனங்கள் பேசிக் கொள்கிறார்களே?''

''அது கிழிந்தது போ! காளை மாடு. காளை மாடு என்றால் 'எனக்கு உழக்குப்பால் தான் வேண்டும்' என்றானும். அந்தக் கதையாக அல்லவா இருக்கிறது?''

''எது?'' என்றது வேதாளம்.

''படத்தைப் பார்ப்போமே!''

## வைதேகி காத்திருந்தாள்

டைரக்டர் ஆர். சுந்தரராஜனின் கொஞ்சம் குழப்பமான வைதேஹி! காத்திருப்பது நியாயம்தான்!

அட்டகாசமான அறிமுகம் அந்த வெள்ளிக்கிழமை(?) ராமசாமிக்கு.

பாத ஊர்வலம் என்ன? பயந்து பயந்து உண்டியில் விழும் காணிக்கை என்ன? அப்புறம் 'இதுவும் ஒரு பிழைப்பா?' என்ன? எம். ஆர். ராதாரவியின் கோபம் என்ன? சந்தையில் துணிச்சலாய் எதிர்க்கும் அந்தப் பெண்ணைத் தரதரவென்று இழுத்து வரும் வேகம் என்ன? கடைசியில் பார்த்தால் -- பரவாயில்லை. நல்ல சஸ்பென்ஸ். ரசிக்கக் கூடிய திருகதை. தாடி மீசை விஜய்காந்த். அந்தத் தாடி மீசைக்குப் பின்னால் ஒரு கதை வைத்திருக்கிறார். காதல் கதை. வெள்ளைப் புடவை ரேவதி ஒரு கதை வைத்திருக்கிறார். பற்றுதற்கு இன்னொரு ப்ளாஷ்பாக்கில் வரும் ஒரு காதல் கதை. அந்தக் காதலர்களைச் சேர்த்து வைக்க வி. காந்தும், ரேவதியும் முயற்சி எடுத்து — கடைசியில் விஜய்காந்த் தியாகச் செம்மல் ஆகிறார்.

கோயில் பிராகாரத்தில் ரேவதி நர்த்தனத்தின் போதும் சரி, வெள்ளைப்புடவையுடன் ரேவதி உட்கார்ந்திருக்க பின்னணியில் அருவி நர்த்தனமிடும் போதும் சரி, காமிரா விளையாடியிருக்கிறது.

'இவனும் கடவுள், இவன் தம்பி முருகனும் கடவுள், இவங்கப்பன் பரமசிவனும் கடவுள், அம்மா பார்வதியும் கடவுள். ஒட்டுமொத்தமா இவங்க குடும்பமே உலகத்தைக் குத்தகைக்கு எடுத்துக் கிட்டு நடத்தறாங்களே, யாருக்காவது உன் வாழ்க்கையைச் சரி பண்ணணும்னுத் தோணிச்சா' என்று கேட்கும் ரேவதியின் அப்பா காரெக்டர் அழுத்தமான, இயலாமையினால் கையாலாகாத காரெக்டர். பிராகாரத்தில் குழைகள் இறுக இறுக நட்டுவாங்கம் பண்ணுவதும், ஒரேயடியாய் சாய்வதும், ஆளேயில்லாத அந்த உட்பிராகாரத்தில் தூண்களுக்கு மத்தியில் சலங்கை சப்தம் மட்டும் ஒலிக்க ரேவதி ஓடிவருவதும் டைரக்டர், நடிகர்கள், காமிராமேன், ம்யூஸிக் டைரக்டர் என்று சகலரும் ஒத்தையுடன் செய்திருக்கும் காட்சி.

கவுண்டமணி, செந்தில்: மடியில் வந்து உருளும் வித்தையைப் பரீட்சை பண்ணும் இடத்தில் தியேட்டர் அதிர்கிறது. 'கல்லால் அடித்தும் காட்சியிலும் மறுபடியும் சிரிப்புக் கொத்து. என்று நகைச்சுவைக்கும் பஞ்சமில்லை.

சின்னட அறிமுகம் அக்கா வேஷங் கட்டினால் அடிபாந்தமாக இருப்பார்.

வி. காந்த் சோக காந்த். ரேவதிக்கு அவ்வளவாக வாய்ப்பில்லாத பாத்திரம்.

இளையராஜா காது குளிர குளிர இசையமைத்திருக்கிறார்.

இப்படி எவ்வளவோ நல்ல விஷயங்கள் இருந்தும் கூட, கதை நொண்டியடிப்பதால் எல்லாம் விழலுக்கு இறைத்த நீர்.

வேதாளம்

5





## வெள்ளித்திரை



"வேதாளத்திற்கு வெண்டைக்காய்ப் பிடிக்குமா?"

வேதாளம் ஜெயமன்மதனை விநோதமாய்ப் பார்த்தது.

"இது என்ன அர்த்தமில்லாமல் ஒரு கேள்வி?"

"சரி, வேதாளத்திற்கு டிஸ்கோ ஆடவாவது தெரியுமா?"

"ஏன் கேட்கிறீர்கள்?"

"குறைந்தபட்சம் குட்டிக்கரணம் போடவாவது முடியுமா?"

"அய்யோ" என்றது வேதாளம். "என் ஆயிற்று உங்களுக்கு?"

"கடைசியாய்ப் பார்க்கிற படம் அப்படி" என்று பதில் வந்தது.

## எனக்குள் ஒருவன்

ட்ர்ர்ர் என்று ஹெலிகாப்டரில் வந்து இறங்கி டிஸ்கோ ஆடும் இளைஞராய்க் கமல். டான்ஸென்றால் டான்ஸ், சும்மா தகதக வென்று டான்ஸ். பார்த்து ரசிப்பதை விட்டு விட்டு இது உடான்ஸ் என்று கமெண்ட் எழுதுகிறது ஒரு பெண். விடுவாரா கமல்? அந்தப் பெண்ணையே துரத்தி ஒரு மாதிரி லவ்வில் குதித்ததோடு நில்லாமல் பூர்வ ஜென்மம், அது இது என்று டார்ஜிலிங் வரை அவளை அழைத்துப் போகிறார்.

படத்தில், டிஸ்கோ, கராத்தே, பரத நாட்டியம், தாய்ப்பாசம், பழிக்குப் பழி எல்லாம் உண்டு. பாபுவின் காமிரா உயிரோடு பேசுகிற காட்சிகள் நிறைய. கமலின் மழை டான்ஸ் காட்சியும், க்ளைமாக்ஸ் வின்ச் சண்டைக்காட்சியும் அவருக்கு ஸ்பெஷல் க்ரெடிட்.

கமலஹாசனா கொக்கா? ஸ்விம்மிங்பூல் சண்டையாகட்டும், அம்மாவைக் கடத்துகிறவர்களோடு போடுகிற சண்டையாகட்டும், கடைசியில் வின்ச்சில் சத்யராஜுடன் போடும் குஸ்தியாகட்டும், டூப் போடாமல் அவரே புரள்கிற ஒவ்வொரடி நம்மைக் கவர்கிறது. மேக்கப்பில் அவர் எடுத்துக் கொண்டுள்ள அக்கறை நமக்கு பிரமிப்பாயிருக்கிறது. சபா செகரட்டரியாக வழுக்கையும், குடுமியும், பூத மூக்குக்கண்ணாடியும், பட்டுவேட்டியுமாய் வந்து கலகலவாக்குகிறார். உபேந்திரா என்று நேப்பாள மண்ணின் வாசத்தோடு (பல்லில் ரப்பர் போட்டு இழுத்து) கராத்தேயில் எதிரிகளின் எலும்பைப் பொலபொல வாக்குகிறார்.

கமலுக்கு அடுத்தபடி புராணம் பாடலாமென்றால் பண்டரிபாய். பிள்ளைப்பாசம் இத்தனை ஜோராய்க் காட்ட இன்றைக்கு இவரை விட்டால் ஆளில்லை. அப்புறம் ஸ்ரீப்ரியா. லாகவமான பரதம், இயல்பான நடிப்பு. தமிழுக்குப் புதுசாய் வந்திருக்கும் ஷோபனா? ஆடிப்பாடி, உருண்டு புரண்டு... ஊம்ஹூம் இன்னும் நிறைய செய்யவேண்டும் இவர், மனத்தில் நிற்பதற்கு.

இளையராஜா பழைய ட்யூன்களைப் புதிய வாத்தியங்களில் தெளித்திருக்கிறார்.

வெளியே வருகிற போது நாம் இந்த ஜென்மமா, போன ஜென்மமா, அடுத்த ஜென்மமா என்று நமக்கே குழப்பம் வருகிறது!

• • •

முருங்கை மரத்தடியில் காற்று சிலுசிலு.

"கேள்விகளைக் கேட்கலாமா?" என்றது வேதாளம்.

"அதெப்படி? இந்தத் தீபாவளிக்கு ரிலீஸான படங்கள் இரண்டு மூன்று பாக்கி இருக்கே? சென்னையில் ரிலீஸே ஆகாதபடம் அதில் ஒன்று. இதையெல்லாம் பார்ப்பதற்கு முன்பே கேள்விகளைக் கேட்பேன் என்றால் ஒப்புக் கொள்ள முடியுமா?" என்று ஜெயமன்மதன் கேட்டதும்,

வேதாளம் சற்றுநேரம் தவியாய்த்தவித்தது. பிறகு ஒரு பெரிய கும்பிடாகப் போட்டுத் தன் தோல்வியை ஒப்புக் கொண்டது. "வாரம் இரண்டு மூன்று சினிமா, அதுவும் தமிழ் சினிமா, பார்த்தும் இன்னும் நீங்கள் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போகவில்லை; வேதாள உலகுக்கும் வரவில்லை! உங்களைப் போன்ற மாவீரம் எனக்கில்லை. போதும், போதும்! நான் சினிமா பார்த்தது! இனியும் பார்க்கச் சொல்லாதீர்கள்!" என்று கூறிக்கொண்டே ஓட்டம் பிடித்து மறைந்து போனது. மறுபடி அது கண்ணில் தென்படவே இல்லை




PHILIPS

# An exciting new composition. Arrangement by Philips.



The Philips Rack System is a perfectly compatible, technically superior and an aesthetic combination that brings you pure and powerful sound.



## 300 watts of undistorted power

That's AH 824. One of the best amplifiers available in the country today. With the most sophisticated features — like wide frequency response from 30 Hz to 20 kHz. Active tone control.

## The Electronic Turntable

AF 834. Stroboscope with pitch control. Electronic motor control. And auto return.

## The Dolby Deck

F 6121. The cassette deck with servo touch and metal compatibility.

## 3 way 3 Speaker bass-reflex system

AH 426 speakers with five segment LED bar graph to indicate power.

If music really means something to you, you've to listen to the Philips Rack System. Walk into the nearest Philips dealer's showroom and ask for a demonstration.

**Philips — the trusted Indian household name for over fifty years**

OBM/1787

# நிறைவு

சுகந்தி

முகூர்த்த நேரம் காத்துக் கொண்டிருந்தது. அது வரை வராத தன் அண்ணா இப்பொழுது கூட வந்து விடக் கூடாதே என்று பயந்து கொண்டிருந்தாள் பத்மா. அவள் மைத்துனி மைதிலிக்கு கல்யாணம். பணக்காரர்களான அவளுடைய அண்ணா தம்பிகளும், அக்கா தங்கைகளும் உறவினர்களும் பட்டும் வைரமுமாக ஜ்வலித்துக் கொண்டிருந்தார்கள். ஏழையான தன் அழகைப் பார்த்து மணந்து கொண்ட தன் கணவன் கூட சமையற்காரரான தன் அண்ணாவை மதிப்பதில்லையே.? அவன் வந்தால் அலட்சியம் காட்டி மனதைப் புண்படுத்தி விடுவார்களே எல்லோரும்.

பெரிய பெரிய — விலையுயர்ந்த பரிசுகளாக வந்து கொண்டிருந்தன மைதிலிக்கு. 'எங்கள் உறவினர்கள் எல்லாம் எவ்வளவு விலையுயர்ந்த பரிசுகள் கொடுக்கிறார்கள் பார்த்தாயா?' என்பது போல எல்லோரும் பத்மாவைப் பார்த்தனர்.

முகூர்த்தம் முடிந்ததும் சாப்பாடு நடந்தது.

''சமையல் ஏ ஒன்!''

''எக்ஸலண்ட்!''

''கத்தரிக்காய் பிட்லை பிரமாதம்!''

''சேமியா பாயசம் வெரி ஃபைன்!''

''உசிலி ஹைகிளாஸ் ''

சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்கள் சாப்பாட்டைப் பாராட்டினர்.

''வருகிறவர்கள் ருசியாக, வயிறு நிறைய சாப்பிட வேண்டும். அதுதான் முக்கியம். அதுதான் மணமக்களுக்கு கிடைக்கிற ஆசி!'' என்றார் ஒருவர்.

இப்படி எல்லோரும் பாராட்டிக் கல்யாணத்துக்கு நல்ல பெயர் சம்பாதித்துக் கொடுத்தவரைப் பார்க்க மைதிலியின் அப்பா முதற்கொண்டு எல்லோரும் ஓடினார்கள். பத்மாவும் ஓடினாள்.

ஏற்கெனவே பேசியிருந்த சமையற்காரருக்குத் திடீரென்று உடல்நலம் குன்றிவிடவே சமையல் செய்ய வந்திருந்தான் சங்கரன் — பத்மாவின் அண்ணா.

''உன்னால தான் கல்யாணம் நிறைவு பெற்றது!'' என்று அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு மைதிலியின் அப்பா சொன்ன போது பத்மாவின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று.



# அடடே நல்ல ஐடியா!

### தேசப்படம் பிழைத்தது

மீனம்பாக்கம் விமானப் போக்குவரத்து கட்டுப்பாடு மையத்தில் விமானங்களின் போக்கைக் காண்பிக்க அட்டையில் சிறிய விமானங்கள் கத்தரித்து அவற்றை இந்திய மாப்பில் அவ்வப்போது இடம் மாற்றிக் குத்தி வந்தனர். இதனால் மாப் சீக்கிரம் சேதமடைந்ததால் நான் தேசப் படத்தின் மேல் 'ஸீ த்ரு' பிளாஸ்டிக் தகடுகளைப் பொருத்தி அதன் மேல் விமான வடிவம் கொண்ட ரப்பர்ஸ்டாம்புகளால் முத்திரை குத்திப் போக்குவரத்து நிலையைக் காண்பிக்க ஏற்பாடு செய்தேன். இது நடந்தது 1948-49-இல்.

டி. சந்தானம், சென்னை-5

### கவலை மறைந்தது!

தொழுநோயால் பாதிக்கப்பட்டுத் திருமணி (செங்கை மாவட்டம்) ஆஸ்பத்திரியில் மனமுடைந்து போய், எதிர்காலம் பற்றிய கவலையில் ஆழ்ந்திருந்தேன். கிறிஸ்துவ கன்னிகாஸ்த்ரீ ஒருவர் கூறிய யோசனையால் இன்று தொழு நோயாளர்களுக்கே சேவை செய்யும் ஒரு அமைப்பில் முக்கியப் பதவியில் மதிப்புடன் இருக்கிறேன்.

க. ஆ. நடராஜன், கீழலங்கம், தஞ்சாவூர்

### 'டபுள் பெனிபிட் ஸ்கீம்'

பாங்கில் லாக்கர் கிடைக்க வேண்டுமானால் கணிசமான தொகை டெபாசிட் செய்ய வேண்டும் என்றார்கள். லாக்கரில் வைக்க விரும்பிய நகைகளை அதே வங்கியில்





## வாசகர் பங்கு

(ஐம்பது பைசாவுக்குக் குறையாமல்.) உண்டியலில் ஒவ்வொருத்தரும் போட்டுவிடுவோம். இத்தொகை வருடக் கடைசியில் லைசென்ஸ் தொகை கட்டப் பயன்படுகிறது.

என். சரஸ்வதி, சென்னை-53

### பரிமாற்றம்

ரயிலைப்பிடிக்கஅவசரமாய்ஆட்டோரிக்ஷாவில் போய்க் கொண்டிருந்தோம். வழியில், மூடியலெவல் கிராசிங் கேட் தடை செய்தது! இன்னும் கால் மணி நேரத்தில் வண்டியைப் பிடித்தாக வேண்டும். பார்த்தேன். எதிர் பக்கம் சினிமாவுக்கு நேரமாகிவிட்டது என்று தவித்துக் கொண்டிருந்த தம்பதியை என் ரிக்ஷாவுக்குப் போகச் சொல்லி நான் அவர்களுடைய வண்டியில் ஏறிக் கொண்டேன். தீர்ந்தது பிரச்சினை.

எம். ஜே. ராமகிருஷ்ணன், சக்ரதார்பூர், பீஹார்.

### உலகம் அவள் கையில்

வகுப்புக்கு அட்லஸ் இல்லாமல் வரும் மாணவிகளை வெளியே அனுப்பி விடுவார் ஆசிரியர். எப்போதும் வெளியே நிற்கும் ஓர் ஏழை மாணவி ஒரு நாள் 'ஜம்'மென்று உட்கார்ந்திருந்தாள். அட்லஸ் முழுவதையும் 'டிரேஸ்' (Trace) செய்து ஒரு நோட்டில் வரைந்து விட்டிருந்தாள்.

ஆர். வஸுமதி, சென்னை-90

### பொன்னான நேரம் மிச்சம்

பக்கத்து வீட்டுக்காரர் தோட்டத்துக்குத் தண்ணீர் ...



அடமானம் வைத்து அதில் இடைத்த பணத்தை டெபாசிட்டாகக் கட்டினோம். மெல்ல மெல்ல நகைகளை மீட்டோம். அது வரை நாங்கள் விரும்பியது போல் நகைகள், வங்கியிலேயே பாதுகாப்பாக இருந்தன. சேமிப்பும் வளர்ந்தது.

**டி. எஸ். வாணி, திருநெல்வேலி-3**

**கள்ளமில்லா பிள்ளைமனம்**

ஊருக்குக் கிளம்பிக் கொண்டிருந்த மருமகள் ஜெயா பரபரப்பாக சாவிக்கொத்தைத் தேடிக் கொண்டிருந்தாள். குழந்தை கையில் அதைக் கொடுத்ததாகவும் அவன் தான் எங்காவது போட்டிருக்க வேண்டும் என்றும் சொன்னதும் நான் வேறொரு சாவிக் கொத்தை அவன் கையில் கொடுத்தேன். நேராகச் சென்று ஆட்டுக் கல்லின் குழியில் சாவியைப் போட்டான் குழந்தை. மருமகளின் சாவிக் கொத்தும் அதில் கிடந்தது.

**ஆர். ரங்கநாதன், திருச்சி-6**

**நேர ப்ராப்ளம்**

அலுவலக நண்பர்களுடன் திருப்பதி சென்றிருந்த போது சத்திரத்தின் மொட்டை மாடியில் படுத்துத் தூங்க வேண்டியதாய்ப் போயிற்று. பணத்தை எப்படி பத்திரப் படுத்துவது என்று யோசித்தோம். யார்







சட்டையிலும் உள் பக்கம் பாக்கெட் இல்லை. சற்று நேரம் சிந்தனைக்குப் பிறகு நண்பர் அனைவரையும் சட்டையைத் திருப்பிப் போட்டுக் கொள்ளுமாறு யோசனை கூறினார். பிறகு பணத்தைப் பத்திரமாக 'உள் பாக்கெட்டில்' வைத்துக் கொண்டு தூங்கினோம்.

**கே. ஆர். பாலசுப்பிரமணியன், சென்னை-61**

**கட்டாய சேமிப்பு**

நாங்கள் டி. வி.க்கும் ரேடியோவுக்கும் தனித்தனி உண்டியல்கள் வைத்துள்ளோம். நல்ல நிகழ்ச்சிகளைப் பார்த்த, கேட்ட கையோடு அந்த மன நிறைவு மாறுவதற்கு முன்னால் கையில் கிடைக்கும் தொகையை



பெரிய டியூபின் ஒரு முனையில் சிறுசிறுதுளைகளாக சிறிய டியூபுகளை இணைத்து ஒவ்வொரு பாத்திக்கும் இணைப்புக் கொடுத்திருந்தார். பெரிய டியூபைக் குழாயில் பொருத்திக் குழாயைத் திறந்ததும் பல இடங்களுக்கு ஒரே சமயத்தில் தண்ணீர் பாய்ந்தது.

**சி. அர்ச்சனு, சென்னை-90**

**வாழ்த்த ஓர் இனிய வழி**

தீபாவளி அன்று கோயிலுக்குப் போய் விட்டுத் திரும்பிய போது பூட்டியிருந்த வீட்டுக் கதவில் வாழ்த்து ஒட்டியிருப்பதைக் கண்டு வியந்தேன். நாம் இல்லாத போது நம்மைப் பார்க்க வரும் நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் இந்த வாழ்த்து என்று விளக்கினான் என் பத்து வயதுச் சுட்டிப்பயல்.

**திருமதி சுவர்ணம் சந்தானம், பங்களூர்-3**

**விலை கொடுத்த பொருளை வீணாக்காமல்**

இன்றைய சமையலில் முதல் மார்க் சௌ சௌ கூட்டுக்குத் தான் என்று விருந்தினர் பாராட்டிய பிறகே மெல்ல ரகசியத்தை வெளியிட்டேன் — ஐந்து ரூபாய் கொடுத்து வாங்கிய தர்பூஸ் பழத்தில் பாதிக்கு மேல் தங்கிப் போகும் வெள்ளைப் பகுதியை உபயோகித்தே கூட்டு செய்திருந்தேன்.

**ஜானகி கிருஷ்ணமூர்த்தி, வாணியம்பாடி**

## உழைப்பே உயர்வு

எங்கள் ஊரில் நிதி திரட்ட வரும் சாரணர், சாரணியர் வெவ்வேறு பகுதிகளுக்குக் குழுக்களாகச் சென்று தோட்டத்துக்கு நீர் பாய்ச்சுதல், புல் செதுக்குதல், குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளுதல் போன்ற சிறிய வேலைகளைச் செய்து தருகின்றனர். நன்கொடை வழங்குவோரும் மனமுவந்து அளிக்கிறார்கள்.

**திருமதி உஷா பாலகிருஷ்ணன் ஒத்தார், நாசிக் மாவட்டம்**

## மனமிருந்தால் மார்க்கங்கள் பல உண்டு

சென்னையில் எதிர் எதிர் ஃப்ளாட்டுகளில் குடியிருந்த ரமாவும் நானும் மாலை நேரங்களில் சாதம் மட்டுமே வைத்ததால் இருவர் வீட்டிலும் அடுப்பு எரிய விடாமல் முறை வைத்துக் கொண்டு ஒருத்தர் வீட்டுக்குக்குள்ளேயே இரண்டு சாதத்தையும் சமைத்து வந்தோம். மனம் ஒத்துப்போனால் பல சிக்கன வழிகளைக் கையாளலாமே!

**ஆர். வேதவல்லி, பாண்டிச்சேரி**

## குடும்பப் பெண்கள் கூட்டுறவு

எங்கள் பன்மாடிக் கட்டிடத்தில் உள்ள அநேக குழந்தைகள் ஒரே ஸ்கூலுக்குச் செல்வதால் அவர்களைப்பள்ளிக்கு அழைத்துச் செல்வது, வீட்டுக்குப் பாடம் சொல்லித் தருவது போன்ற வேலைகளைத் தாய்மார்களே பகிர்ந்து கொண்டு செய்வதால் செலவுமிச்சமாவதோடு சிநேக பாவமும் ஒற்றுமையும் வளரும் என்று எடுத்துச் சொன்னபோது பலர் மனமுவந்து என்னைப் பாராட்டினார்கள்.

**வி. பாக்கியலக்ஷ்மி, பம்பாய்-89**

## திக்குத் தெரியாத காட்டில்

காட்டுப் பாதை வழியே சென்று கொண்டிருக்கையில் மோட்டார் சைக்கிளில் பெட்ரோல் தீர்ந்து போய் மூன்று மணி நேரமாகத் திண்டாடிக் கொண்டிருந்த ஒருவரைப் பார்த்தேன். அந்த வழியே சென்றபவர் தங்கள் வாகனத்திலிருந்து பெட்ரோல் தர விருப்பமிருந்து ,அதை எடுத்து ஊற்ற வழியறியாது சென்று விட்டிருந்தனர். நான் காட்டுக்குள் சென்று கள்ளுடிகள்ளி என்னும் தாவரத்தண்டை ஒடித்து, அதன் நடுத்தண்டைக் குடைந்து நீக்கிவிட்டு தடிப்பான மேல் பகுதியைக் குழாயாக உபயோகித்து என் பைக்கிலிருந்த பெட்ரோலை உறிஞ்சி அவர் பைக்குக்கு விட்டேன். ஆபத்பாந்தவனாக என்னை எண்ணிப் பாராட்டினார் அந்த நபர்.

**சி. ராஜகுரு, கள்ளக்குறிச்சி**

## நண்பனுக்கு நன்றி

திருவனந்தபுரத்தில் டி. வி. ஒளிபரப்பை சானல் ஐந்திலிருந்து சானல் ஒன்பதுக்கு மாற்றியதும் எல்லோருடைய செட்டிலும் 'ரிசப்ஷன்' படு மோசமாகி விட்டது. என் நண்பர் சொன்னதன் பேரில் நான் ஆன்டெனாவில் 'டைபோல்' மட்டும் வைத்துவிட்டு மற்ற எலிமெண்டுகளை நீக்கினேன். 'ரிசப்ஷன்' பிரமாதம் போங்கள். இப்போது எங்கள் காலனியில் உள்ள எல்லா டி. வி. ஆன்டெனாக்களிலும் 'டை போல்' மட்டுமே உள்ளது!

**கே. ஜயபிரகாஷ், திருவனந்தபுரம்**

## வருமுன் காக்க

காரை ரிப்பேர் செய்துவிட்டு, கைநகங்களின் சுனுக்களில் ஏறியிருந்த அழுக்கைக் கஷ்டப்பட்டு சோப் போட்டுத் தேய்த்துக் கொண்டிருந்தார் நண்பர். இந்த சோப்பை முன்பே போட்டு இருக்கலாமே என்று ஐடியா கொடுத்தேன். அழுக்கேறும் வேலைகளைச் செய்யும் முன் சோப்பில் விரல் நகத்தால் கீறிவிடவேண்டும். நகச்சுனுக்களில் சோப் புகுந்து கொண்டுக் கைகளை கழுவும் போது கரைந்து அழுக்குடன் வெளியேறி விடும்.

**எம். ஜி. வடிவேல், ஈரோடு-2**

## இக்கட்டில் உதவிய தந்தி இலாகா

நண்பனின் கல்யாணத்துக்காக பம்பாயிலிருந்து சென்னை வழியாக திருச்சி வந்திறங்கினோம். "சீனு அட்ரஸ்ஸைச் சொல்லுடா ஆட்டோ பிடிக்கலாம்" என்றதும் சீனு பாக்கெட்டில் துழாவி, பெட்டியில் தேடி அட்ரஸ்ஸை சென்னை லாட்ஜில் மறந்து வைத்து விட்டதாகச் சொன்னான். முதலில் சீனுவை அர்ச்சனை செய்து விட்டு சிறிது மூளையைக் கசக்கினேன். பிறகு எல்லோருமாகத் தந்தி அலுவலகத்துக்குப்போய்மணமகன்பெயரைச் சொல்லி அவனுக்கு வந்திருந்த தந்திகளைப் பார்த்து விலாசத்தை அறிந்து கொண்டு நேரத்தோடு முகூர்த்தத்துக்குப் போய்ச் சேர்ந்தோம்.

**பி. ரத்தினவேலு, பம்பாய்-21**

## அசட்டுப்பிடிவாதத்தைஅறிவுவென்றது

சுற்றுலாவின் போது ஹோட்டலில் சாப்பிட நேர்ந்தது. அன்று வெள்ளிக்கிழமை. என் அண்ணிக்கு விரதம். தட்டில் சாப்பிட மாட்டேன். இலையில் பலகாரம் வேண்டும் என்றார். சர்வர் பிடிவாதமாகத்தட்டில் தான் தருவேன் என்றார். பார்த்தார் அண்ணி. பார்சல் கேட்டார். அது வந்ததும் இலைப் பொட்டலத்தைப் பிரித்து வைத்து அந்த சர்வர் முன்னிலையிலேயே சாப்பிட்டு முடித்தார்.

**சேது. புகழேந்தி, பழனி**

---

**ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**ஆர். வசுமதி**
H 8/2, Row Type House.
அருண்டேல் பீச் சாலை,
பெஸண்ட் நகர், சென்னை-600090.

---

# “உங்கள் சமையலறையில் காஸ் கசியும் வாடை வந்தால் என்ன செய்ய வேண்டுமென்று உங்களுக்கு தெரியுமா?”



கலவரமடைய வேண்டாம். முதலில் பிரஷ்ஷர் ரெகுலேட்டர் ஸ்விட்ச்/சிலிண்டர் வால்வை மூடவும். பின்பு உங்கள் ஸ்டவ்வில் உள்ள காஸ் டேப்புகளை மூடவும். எல்லாவித நெருப்புகளையும் அணைக்கவும்; அகல் விளக்கு மற்றும் அகர்பத்தியைக் கூட. மின்சார ஸ்விட்சுகள் எதையும் தொடவேண்டாம். அனைத்து ஜன்னல்கள் மற்றும் கதவுகளை திறக்கவும். இப்போது, உங்கள் வினியோகஸ்தரை உடனடியாக அழைக்கவும்.

பிரச்சனை ஆபத்தானதாக இருந்தால், தீயணைப்பு பிரிவினரை அழைக்கவும்.

காஸ் கசிவைத் தடுப்பதற்கு கீழ்க் காணும் எளிய விதிகளை பின்பற்றவும்.

1) ஒவ்வொரு இரவும், மற்றும் வீட்டிலிருந்து வேலைக்கோ அல்லது விடுமுறைக்கோ புறப்படும் முன்பும் சிலிண்டரை மூடி வைக்கவும்.

2. ரப்பர் ட்யூபுகளில் விரிசல், ஓட்டைகள், தேய்மானம் ஏற்பட்டிருக்கிறதா என்று தவறாமல் சோதிக்கவும்; குறிப்பாக அதன் நுனிகளில்.

3. சிலிண்டர் இருக்கும் பக்கம் குழந்தைகளைப் போகவிடாதீர்கள்

4. நீங்களாகவே ஒருபோதும் சிலிண்டரை சரிசெய்தல் பழுது பார்த்தல், அல்லது சோதனை செய்தல் கூடாது.

5. காஸ் ஸ்டவ் எரிந்து கொண்டிருக்கும்போது ஒருபோதும் கவனிக்காமல் இருக்க வேண்டாம்.

பாதுகாப்பிற்காக இந்த எளிய விதிகளை கவனமாக பின்பற்றவும்




**குக்கிங் காஸை உங்கள் சிறந்த நண்பனாக்கிக் கொள்ளவும்.**

பொதுமக்கள் நலனை முன்னிட்டு பாரத் பெட்ரோலியம் கார்ப்பரேஷன் லிமிடெட்டினால் வெளியிடப்பட்டது.

ARTIG 4373 TAM

# போட்டிக்கதை 13

# அன்புள்ள கௌரி!...

-விஜேதானந்த்

அன்றைப் பகல் பொழுது முழுதும் ரயில் பயணத்திலேயே செலவாயிற்று.

ஊரில் காலெடுத்து வைத்தபோது தெரு விளக்குகளெல்லாம் எரியத் தொடங்கியிருந்தன.

பகல் பயணத்தில் உடம்பு ரொம்பவும் கசகசத்துப் போயிருந்தது. சட்டையில் அங்காங்கே ரயில்கரியின் பாதிப்புக்கள்.

வரும் மாதம் தொடர்ச்சியாக ஐந்தாறு முகூர்த்தங்கள். ஏதாவது ஒருநாளில் அவளை மணையில் மாலையும் கழுத்துமாக உட்கார்த்தி வைத்துவிட வேண்டும். வரிசையாக ராமபாணம் போல் வந்த அம்மாவின் மூன்று கடிதங்களுக்கும் செவிசாய்த்து ஊருக்குப் புறப்பட்டான் தியாகு.

தியாகு வீட்டை அடைந்த போது, பாகீரதி அப்போது தான் மாரியம்மன் கோவிலுக்குப் போய் விட்டுத் திரும்பியிருந்தாள்.

"ஏண்டா! இன்ன வண்டிக்கு வரேன்னு ஒரு லெட்டர் போட்டிருக்கப்படாதோ?..." என்று சந்தோஷமாகக் கேட்டபடி மளமளவென்று அடுப்பைப் பற்ற வைத்தாள். காப்பி கலந்து கொடுத்தாள். குளிக்க வெந்நீர் போட்டாள். ராத்திரிச் சமையலுக்கு ஆக வேண்டியதைக் கவனிக்க ஆரம்பித்தாள்.

மனசுகொள்ளாத சந்தோஷம் வந்துவிட்டால் கை உற்சாகமாக வேலை செய்யும்.

தியாகு குளித்துவிட்டு வந்தான். "அப்பா இன்னும் வரலியா...?" என்று கேட்டான்.

"ஆபீசரா ப்ரமோஷன் ஆனப்புறம் ஒருநாளைப் போல எட்டு மணி ஒன்பது மணின்னு ஆறதுடா..."

வெளியில் வந்தான். திண்ணையில் உட்கார்ந்து கொண்டான். குளுகுளுவென்று காற்று வீசியது. பகல் நேரப் புழுக்கத்துக்கு ஒரு மாற்று.

ஒரு தவயோகி போல் இமைகளை மூடித் தென்றலின் சுகத்தை அனுபவிக்கத் தொடங்குகையில், கௌரி திரையில் வந்து புகுந்து கொண்டாள்.

கும்பகோணம் மார்க்கம். குடவாசலைத் தாண்டி இரண்டு கல் தொலைவில் வண்டு வாஞ்சேரி என்ற சிற்றூர். பேருந்திலிருந்து இறங்கி இடதுபுறம் செம்மண் பரவிய சாலையில் அடியெடுத்து வைத்துப் பதினைந்து நிமிடம் நடந்தால் அத்திக்குளம் கிராமம்.

'கௌரி கிருபா' என்ற பெயரை எழுதி நட்டுக் கொண்டு ஒரு மாடிவீடு. தியாகுவின் மாமா சங்கரலிங்கத்தின் வீடு.

ஒரு கூட்டுறவு வங்கியில் தலைமைக் குமாஸ்தா. மாடு, கன்று, கொஞ்சம் நிலம் என்று உபரிகள்.

கௌரி அவருடைய மூத்த பெண். பத்தாம் வகுப்போடு பள்ளிப்படிப்பு விட்டுப் போயிற்று. மாநிறத்துக்கும் கொஞ்சம் அதிகப்படி. வீட்டு வேலைகளில் அம்மாவுக்குச் சவால் விடுகிற மாதிரி ஒரு சாமர்த்தியம். கைப்பாகத்தில் கடலை எண்ணெயும் நெய்யாய் மணக்கும்.

அவள் பிறந்தபோதே தியாகுவுக்குத் தான் என்று தீர்மானம் பண்ணியாயிற்று.

வேலைக்கான உத்தரவு வந்து பட்டணத்துக்குப் புறப்பட இரண்டு நாட்கள் இருக்கும் முன்பு மாமாவைப் பார்த்துச் சொல்லிக் கொண்டு போக வந்தான்.

"பலே! உத்தியோகத்தைக் கெட்டியாப் பிடிச்சுக்கோ. மேலே மேலே முன்னுக்கு வரணும். என் ஆசிர்வாதம் எப்பவும் உண்டு..." என்றார்.

"போயிட்டு வரேன்..." என்று பொதுவாக எல்லோரிடமும் சொல்லிக் கொண்டான். பளிச்சென்று கதவின் பக்கமாய்



விளிம்பைத் தாண்டித் தெரிந்தது கௌரியின் முகம். கண்களில் நீரின் பளபளப்பு.

'ரெண்டு வருஷம் பொறுத்துக்கோ. ஒருநாளை பிருதிவிராஜன் மாதிரி குதிரையில வந்து உன்னைத் தூக்கிண்டு போறேன்...' என்று சொல்ல ஆசைதான்.

மனசுக்குள் சொல்லிக் கொண்டான். பார்வையில் புரிந்து கொண்டாள்.

மறுநாள். ஞாயிற்றுக்கிழமை.

தியாகு வெளியே புறப்பட்டான்.

''சீக்கிரம் வந்திடு...'' என்றாள் பாகீரதி.

சுந்தரமூர்த்தி, செய்தித்தாளில் கவனமாக இருந்தவர் நிமிர்ந்தார். ''வெயில்ல அதிகம் அலையாதே...'' என்றார்.

அம்மா தொடர்ந்தாள்: ''சாயங்காலம் ராகுகாலத்துக்கு முன்னாடி கிளம்பணும். வக்கீல் சுகப்பிரும்மத்தோட பெண் வசுமதியைப் பார்க்கப் போறோம். ஜாதகம் கனகச்சிதமாப் பொருந்தியிருக்கு. ரதி மாதிரிப் பொண்ணு. நிறையச் செய்வா. 'உங்க பிள்ளை மெட்ராஸ்லேருந்து எப்ப வரார்?'னு போன வாரமே போனில கூப்பிட்டு உன் அப்பாகிட்ட கேட்டாராம்.... ஏன்னா! தியாகு வந்திருக்கிற விஷயத்தை அவாளுக்குத் தெரியப்படுத்திடுங்கோ...''

அதிர்ச்சி அவனை ஆட்கொண்டது. வக்கீல் சுகப்பிரும்மத்தின் பெண் வசுமதி! அப்படியானால் கௌரி...?

சின்ன வயதில் போட்ட முடிச்சு என்ன ஆயிற்று? மாமாவுக்கு இது தெரியுமா? தெரிந்திருந்தால் கௌரிக்கும் விஷயம் எட்டியிருக்க வேண்டுமே! என்ன நினைத்திருப்பாள்?

இதுவும் ஒரு வகையில் நம்பிக்கைத் துரோகம்தான். மனம் கசந்தது!

வெளியில் சுற்றிவிட்டுப் பன்னிரண்டு மணியளவில் வீட்டுக்குத் திரும்பினான். சுந்தரமூர்த்தி வெளியே போயிருந்தார். அந்தத் தனிமையான சூழலைப் பயன்படுத்திக் கொண்டு அம்மாவிடம் பேசினான்.

''டேய்! கௌரியைப் தான் பண்ணிப்பேன்னு நீ எதுவும் அவாளுக்கு உறுதிப் பத்திரம் எழுதிக் கொடுக்கலே. இப்ப உன் அப்பா ஒரு ஆபீசர். உனக்குக் கிடைச்சிருக்கறதும் சாதாரண வேலையில்லே. உன்னைப் போகப் போக உச்சாணிக் கிளையில நிறுத்தி வச்சுப் பார்க்கப் போற உத்தியோகம். ராஜா மாதிரி இருக்கே. உன் அழகுக்கும் படிப்புக்கும் வசுமதி எந்த விதத்துலேயும் குறைச்சலில்லேடா.



சாயங்காலம் அவளைப் பார்த்ததுக்கப்புறம் உன் அபிப்பிராயத்தைச் சொல்லு...''

**மா**லை.

மெல்ல அடியெடுத்து வைத்து வந்தவளைப் பார்த்த தியாகு வியந்து போனான். அப்படி ஓர் அழகு. அப்படி ஒரு நிறம். அவளைப் பக்கத்தில் மானசீகமாக நிறுத்திவைத்துப் பார்த்தான்.

'அம்மா சொன்னது சரிதான்.'

மனசு ஒரு நிர்மானத்துக்கு வந்தது.

''எனக்கு அப்பவே தெரியுண்டா. அசடு மாதிரி, 'கௌரியைத்தான் பண்ணிப்பேன்'னு எங்கே பிடிவாதமா நிக்கப் போறியோன்னு தான் முதலில் நெனேச்சேன். அந்த நினைப்புக்கு அர்த்தமில்லேன்னு அங்கே உன் பார்வை போன தினுசைப் பார்த்தப்பவே எனக்குப் புரிஞ்சு போச்சு...!''

சற்றுப் பொறுத்து சுந்தரமூர்த்தியும் வந்தார்.

''கல்யாணத்தை முடிச்சு அதுக்கப்புறம் தான் அவனை ஊருக்கு அனுப்பி வைக்கணும்...'' என்றார் பாரதியின் காதோடு.

அன்றைய இரவு வசீகரமாக இருந்தது அவனுக்கு.

கௌரியை விரட்டி விட்டு இப்போது மனசின் தர்பார் மண்டபத்தில் வசுமதியின் பிரவேசம்.

**செ**வ்வாய்க்கிழமை.

''மாமாவைப் போய்ப் பார்த்திட்டு வரேன்...'' என்றான் தியாகு.

''நீ எதுக்குடா இப்போ அங்கெல்லாம் போகணும்? நீ ஊரிலேருந்து வந்திருக்கிற விஷயம் உடனடியா இப்ப அவாளுக்குத் தெரிய வேண்டாம்...'' என்றாள் பாரதி.

'அதுவும் சரிதான்...' என்று அவன் மனசும் ஒத்துப் பாடியது.

ஆனால், பிற்பகல் இரண்டு மணி அளவில் சங்கரலிங்கமே வந்து விட்டார்.

''தியாகு வந்திருக்கிறதாகக் கேள்விப்பட்டேன்...'' என்றார்.

உலகிலேயே பழைமையில் இரண்டாவதான மசூதி கேரளத்தில் தான் இருக்கிறது. இந்த மசூதி கி. பி. 629—ஆம் ஆண்டில் கட்டப்பட்டது.

நபிநாயகம் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே மலையாளிகள் பலர் இஸ்லாமிய சமயத்தைத் தழுவியிருந்தார்கள். இந்த மசூதி இவர்களால் கட்டப்பட்டதாகக் கருதப்படுகிறது. கொச்சி நகரத்திலிருந்து வடக்கு திசையில் 15 கிலோ மீட்டர் தொலைவிலிருக்கும் இந்த மசூதியின் பெயர் ''சேரமான் பள்ளி.''

ஆதாரம்: சதீஷ் குரோவர் எழுதிய இந்திய இஸ்லாமிய கட்டிடக்கலை.

தகவல்: கே. எஸ். கணபதி.

அவருக்கு எப்படித் தெரிந்தது?

''என்னமோ நினைச்சிண்டாளும், திடீர்னு புறப்பட்டு வந்து நிக்கறான்...!'' என்றாள் பாரதி.

''அப்படியா...;''

டவுனில் அவருக்குத் தெரிந்தவர்கள் எத்தனையோ பேர். பாரதி மூடிமூடி வைத்தாலும், வக்கீல் சுசப்பிரும்மத்தின் பெண்ணை அவர்கள் ஞாயிற்றுக்கிழமை போய்ப்பார்த்துவிட்டு வந்த விவரம் முதற்கொண்டு எல்லாமே அவர் செவிகளுக்கு எட்டிய விஷயங்கள்தாம்.

மடக்கி மடக்கி அவர் நான்கைந்து கேள்விகள் கேட்டதற்குப் பிறகு, இனியும் பதுங்கிப் பிரயோசனமில்லை என்ற முடிவுக்கு வந்தாள் பாரதி.

''கல்யாணம் என்கிறது ஒரு ஆயிரங் காலத்துப் பயிர். சகலத்தையும் யோசிக்க வேண்டியிருக்கு. தியாகுவோட அப்பா இப்ப ஒரு ஆபீசர். அதுக்கேத்தமாதிரி அந்தஸ்துள்ள இடமாப் பார்க்கணும்னு பிரியப்பட்டார். உனக்கே தெரியும். அவருடைய வார்த்தையை மீறி நானோ, தியாகுவோ எதுவும் செய்ய முடியாதுன்னு. ஒரு வகையிலே பார்த்தா அவர் சொல்றதும் சரிதான்னு படறது...''

அடுத்த அறையில் கட்டிலில் படுத்தபடி இந்த உரையாடலை அனுபவித்து ரசித்தவாறு இருந்தான் தியாகு. 'அம்மாவுக்குச் சாமர்த்தியமாகவே பேச வருகிறது.'

''அப்ப நான் புறப்படறேன்...'' என்று கிளம்பி விட்டார் சங்கரலிங்கம்.

**வெ**ள்ளிக்கிழமை.

இரவு ஒன்பது மணியளவில் சுந்தரமூர்த்தி வந்தார்.

நடையில் தளர்ச்சி. முகத்தில் சோர்வு.

'அந்தப் பெண்ணுக்கு நம்ம தியாகுவைப் பிடிக்கலையாம்...!''

பட்டென்று ஒரு குண்டை வீசியெறிந்தார்.

''யாரு? வசுமதியையா சொல்றேள்...?''

''ஆமாம். சுசப்பிரும்மம் போன் பண்ணிச் சொன்னார். என்ன காரணம்னு சொல்லலே. 'எனக்கு இஷ்டமில்லே. மேலே எதுவும் கேக்காதீங்கோ'ன்னு அந்தப் பொண்ணு சொல்லிடுத்தாம்.''

''நன்னாயிருக்கே இது! ஒரு பெண்ணுக்கு அந்த அளவுக்கு எடம் கொடுத்தா உருப்பட்டாமாதிரிதான். நம்ம பிள்ளைக்கு என்ன குறைச்சலாம்? கண்ணு பொட்டையா? மூக்கு சப்பையா? இவனைப் பண்ணிக்க அவளுக்குக் கசக்கிறதாமா...?''

பதில் சொல்லாமல் விரக்தியாகச் சிரித்தார் சுந்தரமூர்த்தி.

'செய்தி அறிந்தால் தியாகு ரொம்பவும் வருத்தப்படுவான். ஏன், அதிர்ச்சியாகக்கூட இருக்கும்...'' என்றாள் பாரதி.

மாலைக்காட்சித் திரைப்படத்துக்குப்போய் விட்டுத் தியாகு வந்த போது, சோற்றைத் தட்டில் வைத்துக் கொண்டே விஷயத்தையும் மெல்ல எடுத்து வைத்தாள்.

அவன் பதில் பேசவில்லை.

**ம**றுபடியும் ஒரு ஞாயிற்றுக்கிழமை.

# உங்கள் ஒவ்வொரு ரூபாயிலிருந்தும் அதிகபட்சம் எப்படி பிழிந்தெடுக்கலாம்...

இந்த கேள்விக்கு பெரிய பெரிய பொருளாதார வல்லுநர்களே தடுமாறலாம். ஆனால் மிகச் சாதாரணமான, அடிப்படை உபாயம் ஒன்று இருக்கிறது. அது தொன்றுதொட்டு வரும் வழக்கம்—கவலையற்ற பாதுகாப்பான எதிர்காலத்திற்கு உங்கள் வருவாயிலிருந்து ஒவ்வொரு துளியாக சேமித்து வைத்தல். உங்கள் பணத்திற்கு கூடுதல் பலனளிக்கும் வண்ணம் சவுத் இந்தியன் பாங்க் பற்பல திட்டங்களைக் கொண்டுள்ளது.

கற்பக நிதி டெபாஸிட்டுகள், கோல்டன் ஜூபிலி காஷ் சர்ட்டிபிகேட்டுகள், நான் ரெஸிடென்ட் அக்கவுண்ட்டுகள், சேவிங்ஸ் பாங்க் டெபாஸிட்டுகள், ரெகரிங் டெபாஸிட்டுகள், ... சேமிப்புகள்...

**தி சௌத் இந்தியன் பாங்க் லி.**

பதிவு அலுவலகம்: திருச்சூர் கேரளா.

**SIB உங்கள் சேவைக்காகவே எல்லா இடங்களிலும் வளர்கிறது**

Touadu/SIT-02081

## பட்டுப் புடவைப் பரிசுத் திட்டம்

# தூக்கத்தில் ஓர் அனுபவம்

**போட்டி 30**



பின்னல் நடக்கப் போவதற்கு முன் அறிவிப்பு போல் தூக்கத்தில் சிலர் விசித்திரக் கனவு காண்பார்கள். சிலர் அரண்டு போய் உளறிக் கொட்டுவார்கள் அல்லது மகிழ்ந்து சிரிப்பார்கள். சிலர் தங்களை அறியாமல் ரகசியங்களைத் தூக்கத்தில் பேசி மாட்டிக் கொள்வதும் உண்டு. உங்கள் அனுபவம் அல்லது உங்கள் நண்பர், உறவினர் அனுபவம் எப்படி? கீழே உள்ள வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். சுவாரஸ்யமாயிருந்தால் பிரசுரமாகிப் பரிசு பெறும். குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப்புடவை உறையின் மீது ''தூக்கத்தில் ஒரு அனுபவம்'' என்று குறிப்பிடவும்.

முடிவு தேதி: **10.12.84.**

**இன்னும் 23 பட்டுப் புடவைகள் பரிசாக வழங்கப்படக் காத்திருக்கின்றன. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறுங்கள்.**

என் பெயர்: ..............................

**விலாசம் :** ..............................

ஒரு விடுமுறை நாளின் மெத்தனத்தோடு நிமிடங்கள் வளர்ந்து கொண்டிருக்கையில், வாசலில் ஒரு சைக்கிள் ரிக்ஷா வந்து நின்றது.

சங்கரலிங்கமும், மாமியும்.

''வாங்கோ...''

ஒரு சம்பிரதாய வரவேற்பளித்தார் சுந்தரமூர்த்தி.

வந்தவர்கள் பத்தே நிமிடங்கள் தான் தங்கியிருந்தார்கள்.

''ஆனி இருபத்தைஞ்சுக்கு முகூர்த்தம் வச்சிருக்கு. ரெண்டு நாள் முன்னாடியே வந்து கல்யாணத்தை நல்லபடியா நடத்திக் கொடுக்கணும்...''

சங்கரலிங்கம் பத்திரிகையைக் கொடுத்தார்.

கௌரியின் திருமண அழைப்பிதழ் அது!

ஒரு சோக நாடகத்தின் முடிவாக அப்பாவும், அம்மாவுமே இப்போது பரம வைரிகளாக அவனுக்குத் தெரிந்தார்கள்.

செவ்வாய்க்கிழமை.

கொட்டிலில் பரம சாதுவா நின்று கொண்டிருந்த பசுவின் கழுத்துப் புறத்தைப் பரிவோடு தடவிக் கொடுத்தபடி அதற்கு அகத்திக்கீரை தந்து கொண்டிருந்தாள் கௌரி.

வாசலில் சைக்கிள் மணி ஓசை.

தபால்காரர் தான் வந்திருக்கவேண்டும்.

''அக்கா! உனக்கு லெட்டர் வந்திருக்கு'' என்று ஓடிவந்தாள் ஹேமா. அவளுடைய தங்கை.

கடிதத்தைப் பிரித்தாள்.

முத்துமுத்தான கையெழுத்து. பிரஸ்ஸில் கொடுத்து அச்சடித்தமாதிரி அழகாக எழுதப்பட்டிருந்த கடிதம், ஆர்வத்தோடு படிக்க ஆரம்பித்தாள்.

அன்புள்ள கௌரி!

உன்னுடைய கடிதமும் அழைப்பிதழும் கிடைத்தன. ஒரு வாரம் முன்னதாகவே வந்துவிடுகிறேன். நிறையப் பேச வேண்டும். கல்யாணத்துக்குப் பிறகு என்னுடன் பேச உனக்கு நேரம் இருக்காதே!

அப்புறம் இன்னொரு விஷயம். கேள்விப் பட்டிருப்பாய் என நினைக்கிறேன். அந்தஸ்து ஆடம்பரம் என்று சொல்லி உன்னைத் தட்டிக் கழித்தவர்கள் போன வாரம் என்னைப் பார்க்கவந்தார்கள். என்னுடைய நெருங்கிய சினேகிதிக்கு ஓர் ஏமாற்றம் என்றால் அந்த வருத்தம் எனக்கும் இருக்காதா? வருத்தம் என்று சொல்வதை விட கோபம் என்றே சொல்ல வேண்டும். சரியாகப் பழி தீர்த்துக் கொண்டுவிட்டேன். அந்த ஆபீசர் பிள்ளையை எனக்குப் பிடிக்கவில்லை என்று சொல்லிவிட்டேன்.

ஒரு பெண்ணுக்கு ஏற்படக் கூடிய ஏமாற்றம் அவளுள் என்ன பாதிப்பை உண்டுபண்ணுகிறது என்பதை ஓர் ஆணும் அனுபவித்துப் பார்க்கவேண்டாமா? அதற்காகத் தான் இந்தப் பரீட்சை? சரிதானே?

அன்புடன்,
வசுமதி.





ஆரோக்கியமான பற்களுக்கும் ஈறுகளுக்கும் என்றுமே ஆதாரம்
நம்பகமான கிராம்புத் தைலம் அது தருமே பரிகாரம்

**புதிய**

இதோ

# ப்ராமிஸ் டூத் பவுடர்

**காலங்காலமாக பயன்பட்டு வரும் கிராம்புத் தைலம் கொண்டது.**

கிராம்புத் தைலம் கொண்ட ப்ராமிஸ் டூத் பவுடர் அளிக்கும் நன்மையைப் பாருங்கள்.

- வாய்த் துர்நாற்றத்தையும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளையும் அகற்றுகிறது.
- உங்கள் சுவாசத்திற்கு புத்துணர்ச்சியையும் தூய்மையையும் தருகிறது.
- உங்கள் ஈறுகளை இதமாகத் தேய்த்துக் கொடுத்து ஆரோக்கியத்தை உண்டாக்குகிறது.
- உங்கள் பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது.
- பெப்பர்மிண்ட் மற்றும் கிராம்புத் தைலத்தின் இணையற்ற சுவை.




3 பல்சாரா

**கிராம்புத் தைலம் கொண்ட புதிய இணையற்ற ப்ராமிஸ் டூத் பவுடர்**

CHAITRA-BLS-436 TAM

# சிறையில் நெடிய நாட்கள்

## 2

ஆகஸ்ட் நாற்பத்தி இரண்டு. அநேகமாக எல்லாத் தலைவர்களும் கைதாகி விட்ட நேரம். அடுத்த இலக்கு ஆவர்தான். வெளியே வலை வீசித் திரிகிறது போலீஸ். கண்ணில் பட்டால் கைது செய்யக் காத்திருக்கிறது. என்ன செய்யலாம்? பெரோஸ் யோசித்தார். கைதாகிச் சிறைக்குப் போகலாம். ஆனால் காரியம் கெட்டுப்போகும். செய்ய வேண்டிய வேலை இருக்கிறது ஏராளம். தலைவர்கள் இல்லாத நேரத்தில் இயக்கம் தளர்ந்து விடக் கூடாது. இதற்கு அவசியம் இடைவிடாத பிரச்சாரம். விளம்பரம் செய்ய வேண்டுமானால் வெளியில்தான் போக வேண்டும். வெளியில் போகும்நேரம் விலங்கில் மாட்டிச் கொள்ளக் கூடாது.

என்ன செய்யலாம்? கண்ணை மூடி மேஜு தட்டை வருடியபடி யோசனை செய்தார் பெரோஸ் சாந்தி. சட்டென்று ஒரு மின்னல் வெட்டிற்று. எழுந்து சண்ணாடியில் தன்னைப் பார்த்தார். நெடுநெடுவென்று உயரம். உயரத்திற்கேற்ற பருமன். உற்ற சிவப்பு நிறம். கருகருவென்று மீசை வளர்த்தார். காக்கிச் சட்டை அணிந்தார். ஆளே மாறிப் போனார். யார் பார்த்தாலும் ஆங்கிலோ இந்தியச் சிப்பாய் என்று அடித்துச் சத்தியம் செய்வார்கள். ஆங்கிலோ இந்தியச் சிப்பாய் வேஷத்தில் தலை மறைவாய்ப் போனார் பெரோஸ். அவர் மூலம் ஆனந்த பவனத்தில் இருந்து அரசியல் பிரசுரங்கள் ஊர் ஊராய்ப் போயிற்று. சிறைக்குப் போன தொண்டர் தம் குடும்பம் தெருவில் நிற்காமல் இருக்கப் பணஉதவி போயிற்று.

இராணுவத்தின் கவனம் ஆனந்தபவன் மேல் திரும்பிற்று. ஆனந்த பவனத்திற்கு அடுத்த இல்லம் சுயராஜ்ஜிய பவனம். அதை இராணுவம் ஆக்கிரமித்துக் கொண்டது. ஆனந்த பவனத்தின் மீது கண்ணையும், காதையும் வைத்துக் கூர்ந்தது. தோட்டத்திற்கு அந்தப்புறம் துப்பாக்கி நீட்டி மிரட்டியது. வீட்டிற்கு வெளியே வேலைக்காரர்கள் வந்தால், ''நில்'' என்று அதட்டியது.

எந்நேரமும் இராணுவம் வீட்டிற்குள் நுழைந்து சோதனையிடும் என்ற நிலைமை. நல்லால் இப்படி ஒரு துன்பம் ஆனந்தபவனத்திற்கு ஏற்பட வேண்டாம் என்று உள்ளே ஒளிந்திருந்த சாஸ்திரி வெளியே வந்தார். கைதானார்.

தலைமறைவாய் இருந்த பெரோசிற்குத் தகவல் ஒன்று கிடைத்தது. அடுத்த நாள் இந்திரா கைதாக இருக்கிறார் என்ற செய்தி அது. ஜெயிலுக்குப்போவதற்குக் கவலைப்படவில்லை இந்திரா. ஆனால் வெறுமனே வீட்டில் இருந்து ஜீப் ஏறி நேரே சிறைக்குப் போய் இறங்க விருப்பமில்லை. போவதற்குள் சிறிய சலனமாவது ஏற்படுத்த வேண்டும். மக்களைத் திரட்ட இந்த வாய்ப்பை உபயோகிக்க வேண்டும். இந்தச் சமயம் பிரச்சாரம் செய்ய ஏற்ற சந்தர்ப்பம் என்றார் பெரோஸ்.

அடுத்த நாள் ஐந்து மணிக்குக் கூட்டம் ஒன்றுக்கு ஏற்பாடாயிற்று. காதோடுகாதாக ஊர் முழுக்கச் செய்தி போயிற்று. போலீசிற்கும் தகவல் கிடைத்தது. எந்த இடத்தில் கூட்டம் என்று போலீசிற்குத் தெரியவில்லை. ஆளுக்கொரு இடம் சொல்லிக் குழப்பினார்கள். எது சரியான இடம் என்று அதனால் ஊகிக்க முடியவில்லை.

○ சுதந்திரப் போராட்ட காலத்தில் பெற்றோருடன் இலங்கை சென்றிருந்தபோது





○ மகாத்மா காந்தி 21 நாள் உண்ணாவிரதம் இருந்தபோது அவரருகே இந்திராகாந்தி ஆறு வயதில்

ஐந்து மணிக்கு இந்திரா வெளியில் வந்தார். திமுதிமுவென்று கூட்டம் திரண்டது. பக்கத்தில் இருந்த சினிமாக் கொட்டகை, காபி ஹோட்டல், பெட்டிக் கடை, சீட்டு கிளப் என்று முன்னரே கொஞ்சம் கொஞ்சமாகக் கூடியிருந்த கூட்டம் அது.

இந்திரா பேச ஆரம்பித்த பத்தாம் நிமிடம் தடதடவென்று ராணுவம் வந்தது. லாரி நிறைய ஆயுதம் ஏந்திய சோல்ஜர்கள். கூட்டத்தை வளைத்துக் கொண்டு நின்றார்கள்.

வெளியே தலைக்காட்டாமல் வீட்டின் முதல் மாடியில் இருந்து ஜன்னல் இடுக்கு வழியே பார்த்தபடி நின்று கொண்டிருந்தார் பெரோஸ். பார்த்துக் கொண்டிருக்கும் போதே, "பேச்சை நிறுத்து" என்று இரைந்தான் சார்ஜெண்ட். துப்பாக்கியை எடுத்தான். நெற்றிப் பொட்டிற்கு நேரே, ஒரு முழ தூரத்தில் நின்று, குறி பார்த்தான். பதறிக் கொண்டு இறங்கி வந்தார் பெரோஸ். "சுடாதே!" என்று அலறினார். சார்ஜெண்ட் திரும்பிப் பார்த்தான். முகத்தையும், உடையையும் உறுத்துப் பார்த்தான். சாதாரண சிப்பாய் ஒருவர் சார்ஜெண்டான தனக்குக் கட்டளை இடுகிற விந்தையும் பார்த்துத் திகைத்தான்.

சட்டென்று பெரோசிற்குப் புரிந்தது. தான் போட்டிருந்த வேஷம் ஞாபகம் வந்தது. ஆங்கிலோ இந்தியச் சிப்பாய் வேஷம். "ஐ... மீன்... சுட்டுவிடு... இல்லையென்றால் போனால் போகட்டும் விட்டுவிடு. வீணாகப் பயமுறுத்தாதே. பாவம் பெண் பிள்ளை..."

சார்ஜெண்ட் துப்பாக்கியைக் கீழிறக்கினான். ஜீப்பிற்குக் கூட்டிச் செல்ல இந்திராவின் கையைப் பிடித்து இழுத்தான். இருபத்திஐந்து வயதுப் பெண் பிள்ளையை அன்னியன் ஒருவன் கையைப் பிடித்து இழுப்பது கண்ட கூட்டம் வெகுண்டது. கோபமாய் முன்னேறி ராணுவத்தைத் தாக்கியது. கட்டிய மனைவியை ஒருத்தன் கைப்பிடித்து இழுப்பதைக் கண்ணெதிரே பார்த்துக் கூட்டம் முழுவதும் கோபித்துக் கொண்ட போதும் பெரோசால் ஒன்றும் செய்ய முடியவில்லை. தலை மறைவாய் இருப்பதற்குத் தரித்த வேஷம் தடை செய்தது. நெடுநேரம் வேஷம் நிலைத்து இருக்கவில்லை. சிப்பாய் ஒருவன் கட்சி மாறியதைக் கண்ட சார்ஜெண்ட் சந்தேகத்தின் பேரில் அவரையும் அள்ளிப் போட்டுக் கொண்டு போனான்.

இந்திராவிற்குச் சிறை புதிதல்ல. அப்பாவையும், அம்மாவையும், தாத்தாவையும் அநேக சொந்தக்காரர்களையும் நண்பர்களையும் பார்க்க அடிக்கடி போனதுண்டு. பதின்மூன்று வயது பள்ளிக்கூடச் சிறுமியாய் இருந்த போதே காந்தியைப் பார்க்க ஜெயிலுக்குப் போனதுண்டு. ஆனால் வெளியில் இருந்து விசிட்டராய்ப் பார்ப்பது வேறு. உள்ளேயே போய் விடுவது வேறு.

சிறையில் ஒவ்வொரு நாளும் ஒரு வருடம். நெடிய நாட்களைக் கொண்டு மெதுவாய்ச் செல்லும் நீண்ட வருடம். சிறையின் துயரம் சுவையற்ற சோறு என்பதோ வசதியற்ற வாழ்க்கை என்பதோ மட்டுமல்ல. மனிதர்களை மிருகங்களாய் நடத்தும் அவமானம்.

மாலன்

## அருள்வாக்கு

சாவு என்றால் எவனுக்கும் பயம் தான். ஆயுள் முழுக்க நாஸ்திகனாக இருந்தவன் கூட அந்திம காலத்தில் ஏதோ ஒரு பெரிய சக்தியின் கையில் தானிருக்கிறோம் என்று கொஞ்சமாவது தெரிந்து கொள்ளாமலிருக்க மாட்டான். அந்த நேரத்திலே பயத்தைப் போக்க அந்தச் சக்திதான் கதி என்ற எண்ணம் எவனுக்கும் வராமல் இருக்காது. எவனுமே ஈசுவர தியானத்தோடுதான் சாக விரும்புவான் என்றே எனக்குத் தோன்றுகிறது. ஆனதால் நாம் அவனுக்கு உபகரிப்பதை அவன் நிச்சயம் ஏற்றுக் கொள்வான். அவனுடைய பந்துக்களும் இந்தக் கைங்கர்யத்தை வரவேற்பார்கள். புறப்பாடு நன்றாக நடப்பதற்கே நாம் உபகாரம் பண்ணுகிறோம் என்றால் எவரும் ஆக்ஷேபிக்க மாட்டார்கள். அதிலும் நாம் அவர்களுக்கு எந்தச் செலவும் சிரமமும் வைக்காததால் நிச்சயம் ஆக்ஷேபிக்க மாட்டார்கள். ஆனதால் நாம் இப்படிப்பட்ட தொண்டு செய்கிறோம் என்று தெரிந்து விட்டால், அவர்களே நம்மைக் கூப்பிடுவார்கள். கூப்பிடா விட்டாலும் நாம் போக வேண்டும். அவர்கள் கடும் நாஸ்திகர்களாக இருந்து ஆக்ஷேபித்தால் கொஞ்சம் எடுத்துச் சொல்லிப் பார்க்கலாம். அப்படியும் கேட்காவிட்டால் திரும்பி விடலாம். ஆனால் அப்போதும்கூடக் கோபம் இல்லாமல் சாகிற ஜீவனுக்காகப் பிரார்த்தனையை நமக்குள் செய்து கொள்ள வேண்டும். மொத்தத்தில் மான அவமானம் பார்க்காமல் நம்மால் முடிந்த தொண்டைச் செய்யப் பாடுபட வேண்டும். மான அவமானம் பார்க்க ஆரம்பித்து விட்டால் அது தொண்டே இல்லை.

செய்ய வேண்டியது என்னவென்றால் பிராணாவஸ்தையில் இருக்கிறவர்களிடம் கோயில் பிரஸாதத்துடன் போக வேண்டும். அவர்களுக்குக் கங்கா தீர்த்தம் கொடுக்க வேண்டும். விபூதி இடவேண்டும். துளஸியை வாயில் போட வேண்டும். அவர்கள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு 'சிவ. சிவ. சிவ. சிவ' என்றோ ராம. ராம. ராம. ராம' என்றோ உரக்கச் சொல்ல வேண்டும். உரக்கச் சொல்ல வேண்டியது அவசியம். ஜீவன் காதிலே அது பட்டு மனத்தைத் திருப்பவேண்டுமாதலால் உயிர் போகும் வரையில் இப்படி நாம ஜெபம் செய்வது தான் சிரேஷ்டம்.

- ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய ஸ்வாமிகள்



மந்தைகளாய் ஓட்டிச் செல்லும் துர்வழக்கம். நம்பர்களாய்க் கணக்கிடும் அக்கிரமம். அந்தரங்கம் அற்ற பகிரங்கம். வெளி உலகோடும், செய்திகளோடும் துண்டிக்கப்பட்ட தனிமை. கண்ணையும் மனத்தையும் நிறைக்கிற வர்ணங்களோ, வாசனைகளோ, அழகோ அற்ற சூன்யம். தரை, சுவர், உடை எல்லாம் மண்ணின் பழுப்பு நிறம்.

பெரோஸும் அதே சிறையில் தான் இருந்தார். கலியாணமான புதிது. எனினும் கணவனும் மனைவியும் சந்தித்துக் கொள்ளவோ, பேசுவதற்கோ அனுமதிக்கப்படவில்லை. பெரோஸுடன் பேச வேண்டும் என்று மனு கொடுத்தார் இந்திரா. உடனே பெரோஸ் வேறு ஊர் சிறைக்கு மாற்றப்பட்டார்.

உடல் நலம் குன்றிப் படுத்தார் இந்திரா. கவர்னர் வரைக்கும் செய்தி போயிற்று. சிவில் சர்ஜனை அனுப்பிவைத்தார் கவர்னர். பரிசோதித்துப் பார்த்த டாக்டர் டானிக், பழங்கள், ஓவல்டின் என்று ஒரு பட்டியல் எழுதினார். ஜெயில் சூப்பிரண்டெண்ட் கையில் கொடுத்தார். டாக்டர் அந்தண்டை திரும்பியதும் சீட்டைக் கிழித்துக் காற்றில் ஊதினார், சூப்பிரண்டெண்ட்.

ஒரு நாள் பாதி ராத்திரியில் வீல் என்று அலறினார் ஜோஹ்ரா. பெண் வார்டன். அவர் ட்யூட்டி நேரத்தில் மணிக்கொருதடவை பஞ்ச் செய்ய வேண்டிய கடிகாரத்தைச் சுற்றிக் கொண்டு பளபளவென்று கரு நாகம். படமெடுத்துச் சீறுகிறது. கையை வைத்தால் நாகம் கொத்தும். பஞ்ச் செய்யவில்லை என்றால் வேலை போகும். வார்டன் பாடு திண்டாட்டம்.

அவர் போடுகிற கூச்சல் வெளியே கேட்கவில்லை. காதில் விழுந்த ஆண் காவலாளிகள் உதவிக்கு வரவில்லை. பெண் பிள்ளையைச் சீண்டிப் பார்க்கச் சரியான நேரம் இதுதான் என்று அவர்களுக்கு ஒரு சந்தோஷம்.

''ஏன் இப்படி அலர்ற?''

''வந்து பார் இங்கே. வால் கிளாக்கிலே பாம்பு!''

''பாம்பா கடியாரத்திலேயா நிஜமாவா? மேலயா கீழயா?''

''வந்து பாரேன். ப்ளீஸ்.''

''நீ சொல்றதைப் பார்த்தா நீளம் அதிகம் போலத் தோணுது!''

''நாலு நாலரை அடி இருக்கும்.''

''நாலா நாலரையா சரியாய்ச் சொல்லு!''

''நான் என்ன டெய்லரா டேப்பை வச்சுக்கிட்டு நிக்கிறேனு?''

பேச்சு வளர்ந்து கொண்டே போகிறது. கடைசியில் அவள் கண்ணீர் விட்டு அழ, மேட்ரனுக்குத் தகவல் போகிறது. மூணு பர்லாங் தள்ளி மேட்ரன் வீடு. மேட்ரன் எழுந்து சூப்பிரண்டெண்டை எழுப்பிக் கொண்டு வருவதற்குள்,

பாம்பு நழுவி விட்டிருந்தது!

உயிரே போகிற சூழ்நிலையில் மாட்டிக் கொண்டாலும், அது பெண் என்றால், கேலி பேச அப்போது கூட ஆட்கள் இருப்பார்கள் என்று அன்று தெரிந்து கொண்டார் இந்திரா!

(தொடரும்)

# தாவண்கெரே

## ஃபாஷன் துணிரகங்கள்



மென்மையாக நெசவு
செய்யப்பட்டது பிரியா*
டெரீன் சேலைகள்—கவர்ச்
சிகரமான டிசைன்களில்—
வசீகர வண்ணங்களில்.

அழகுடன் தழுவிடும்
அருமையான சேலைகள்.

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்.
ஹனுமந்தப்பா கட்டிடம்.
சித்ரதுர்கா ரோடு.
தாவண்கெரே-577 002.

ஷோ ரூம்கள்:
காவேரி பவன். பெங்களூர்-560 009.
தாஜிபன்பேட். ஹுப்ளி-580 020.
சித்ரதுர்கா ரோடு. தாவண்கெரே-577 002.

*டெரீன்—CAFI-இன் ரிஜிஸ்டர்டு ட்ரேடு மார்க்

THOMAS/8401-B/TAM

## ஏழு நாடுகளில் எட்டு வாரங்கள்



5

# கொலோனும்

கொலோன் நகரத்தின் புகழ்பெற்ற அழகிய கதீட்ரல் கோபுரங்களை யாரும் ஒருமுறை பார்த்தால் கூட மறக்க முடியாது. நூரென்பர்க், ஊரெபக், நகரங்களிலும் இப்படிக் கோபுரங்கள் உண்டென்றாலும் முதற்பரிசு என்னவோ கொலோன் கதீட்ரலுக்குத்தான் கிடைக்கும். ரைன் நதிக்கரையில் அழகுற அமைந்துள்ள கொலோன் நகருக்குக் கதீட்ரல் நகரம் (The Cathedral city) என்றே ஒரு பெயர்.

கதீட்ரலைச் சுற்றித்தான் கொலோன் நகரமே அமைந்திருக்கிறது. நூற்றைம்பத்தேழு மீட்டர் உயரமுள்ள கோபுரங்கள் இரண்டும் எந்தத் திசையிலிருந்து பார்த்தாலும் பல மைல் தொலைவுக்குத் தெரியக் கூடிய அளவு பிரதானமாக விளங்குகின்றன. ஏராளமான பிரெஞ்சு கதீட்ரல்களின் மாதிரிகளைப் பார்த்து முடிவு செய்து கட்டி நிறைவேற்ற 600 ஆண்டுகள் ஆனதாகவும் 1880ல்தான் பூர்த்தியாயிற்று என்றும் கொலோன் கதீட்ரலைப் பற்றிய வரலாறு சொல்கிறது. பிரம்மாண்டமான கோபுரங்களை நிறைவு செய்யப் பணப்பற்றாக்குறை ஏற்பட்டதாலேயே பல முறை நின்று நின்று வேலை நடந்ததாம். இன்னும் கூட வேலை நடக்கிறது. மாற்ற – செப்பஞ் செய்ய ஜீர்ணோத்தாரண வேலைகளை நிறைவேற்ற என்று சுமார் எழுபது கட்டிடக் கலைஞர்கள் கதீட்ரலில் நிரந்தரமாக நியமிக்கப்பட்டிருக்கிறார்களாம்.

ஜூன் 6–ந் தேதி கொலோன் வந்து அன்று மாலையே அங்கிருந்து விமான மூலம் மேற்கு ஜெர்மனியின் புகழ் பெற்ற துறைமுகப்பட்டினமான 'ஹாம்பர்க்' நகருக்குப் புறப்பட்டோம். கொலோனிலிருந்து ஹாம்பர்க் நகருக்கு ஐம்பத்தைந்து நிமிஷ விமானப் பயணம். ஹாம்பர்க் மேற்கு ஜெர்மனியில் பெர்லினுக்கு அடுத்தபடி மக்கள் தொகை அதிகமுள்ள பெரிய நகரம். இரவு 7 மணி சுமாருக்கு ஹாம்பர்க் போய்ச் சேர்ந்தோம். ஹாம்பர்க் ரயில் நிலையத்திற்கு எதிரே இருந்த ஹோட்டல் ரெய்ஷாஃப்பில் (Hot.l Re'chshof) தங்குவதற்கு ஏற்பாடாகி இருந்தது. ஒரு தனிப் பெரும் நகரமும் அதன் சுற்றுப்புறங்களுமே சேர்ந்து ஒரு மாநிலமாக (city state) இருக்கும்அளவுக்கு ஹாம்பர்க் முக்கியத்துவம் வாய்ந்தது. மேற்கு ஜெர்மனியின் பெடரல் மாநிலங்களில் ஹாம்பர்க்கும் ஒன்று. பம்பாயைப் போல வர்த்தகமும் ஏற்றுமதி இறக்குமதியும் இணைந்த நகரம் ஹாம்பர்க். 'ஹாம்பர்க் உறங்குவதில்லை. இரவெல்லாம் பாடிக் கொண்டிருக்கிறது' – என்பது ஒரு பழைய ஜெர்மன் பாடல்.

பகலும் இரவும் இருபத்து நாலு மணி நேரமும் ஓய்வு ஒழிவின்றி வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் 'ஹாம்பர்க்' துறைமுகத்தில் கடந்த பதினைந்து ஆண்டுகளில் ஒரே ஒரு சிறிய வேலை நிறுத்தத்தைத் தவிர வேறு வேலைநிறுத்தம் எதுவுமே நேர்ந்ததில்லை என்று கேள்விப்பட்டபோது

○ ஹாம்பர்க்கில் ஒரு வீதி



○ ஹாம்பர்க் நகரப் புதுமைகளுள் ஒன்று



# ஹாம்பர்க்கும்

நா. பார்த்தசாரதி

மிகவும் வியப்பாயிருந்தது. துறைமுகத்தில் ஏற்றுமதி — இறக்குமதி வேலைகளும் — கப்பல்களின் புறப்பாடுகள் — வருகைகளும் குறித்த காலத்தில் — குறித்தபடி நடப்பதாகப் பெருமிதத்தோடு சொல்கிறார்கள். ஹாம்பர்க் துறைமுகத்தில் மட்டும் பல்வேறு நாடுகள் — இனங்களைச் சேர்ந்த ஒரு லட்சம் தொழிலாளர்கள் அயராது வேலைபார்க்கிறார்கள். இந்தக் கண்ணோட்டத்தில் ஹாம்பர்க் ஒரு சர்வதேச நகரம். அதற்சேற்பஎல்லாவகை உணவுகளும் உணவு விடுதிகளும் இந்நகரில் உள்ளன. தொண்ணூறு நாடுகளிலிருந்து பதினாறாயிரம் வர்த்தகக் கப்பல்கள் வந்து போகும் பெருமை 'ஹாம்பர்க்' துறைமுகத்திற்கு இருக்கிறது. ஜெர்மனிக்கு மட்டுமின்றிப் பிற ஸ்காண்டிநேவிய நாடுகளுக்கும் முக்கியத் துறைமுகம் ஹாம்பர்க்.

துறைமுகப் பகுதியின் நடு அம்சமாக ஃப்ரீபோர்ட் ஏரியா (Free port aiea) விளங்குகிறது. மிக நவீனமாக அமைக்கப்பட்டுள்ள கண்டெயினர் டெர்மினல்களின் (Container terminals) சிறப்பை எவ்வளவு விவரித்துச் சொன்னாலும் தகும். பொதுவில் சரக்குகளை ஏற்றி இறக்கும் பகுதி (General cargo te minals) சகல நவீன வசதிகளும் நிறைந்து விளங்குகிறது. சுமார் நாற்பதுடன் வரை ஏற்றி இறக்கும் பெரிய கிரேன்களும் (Cranes) சிறுசிறு போர்க் லிப்ட்களும் (Fork Lifts) இருபிம்ய பக்கமெல்லாம் தென்படுகின்றன. எல்பே (River elbe) ஆற்றின் இருபெரிய கிளைகளும் முகத்துவாரத்தை இணைக்கும் பல்வேறு நீர்வழிகளும் ஹாம்பர்க் துறைமுகத்துக்கு இசைவாக அமைந்துள்ளன.

துறைமுகமாக உள்ள ஹாம்பர்க் நகருக்கு .வேறு ஒரு முக்கியத்துவமும் இருக்கிறது. ஜெர்மனியின் தகவல் தொடர்பு செய்திகளுக்குக் கேந்திர நகரமும் இதுவே. ஏழு மில்லியன் விற்பனையாகும் மொத்த தினசரிகளும், 27 மில்லியன் வாராவாரம் செலவழியும் சஞ்சிகைகளும் ஹாம்பர்க்கிலிருந்து பிரசுரமாகின்றன. டெலிவிஷனில் திரையிட ஏற்ற தயாரிப்புக்க உருவாக்கும் 'ஸ்டுடியோ ஹாம்பர்க்' இந்நகரில் தான் இருக்கிறது. ஐரோப்பாவில் உள்ள நவீன டெலிவிஷன் தயாரிப்புக்கே கம்பெனிகளிலேயே இது முதன்மையானது என்கிறார்கள். இதனால்தானோ என்னவோ எங்களுக்கு ஹாம்பர்க் துறைமுகத்தைப் படகில் சுற்றிக் காண்பித்த அதிகாரி ஒருவர் குறிப்பிட்டார்:—

''உலகின் தொண்ணூறு நாடுகளுக்குத் துறைமுகமாக விளங்குவதோடு இப்போது புதிய அன்றாட உபயோகம் ஒன்றிற்கும் இது பயன்பட்டு வருகிறது. எங்கள் டெலிவிஷன் படத் தயாரிப்பு நிறுவனங்கள் தயா

○ ஹாம்பர்க் துறைமுகத்தில் கிடங்குகள் நிறைந்த ஒரு பகுதி



ரிக்கும் இரைம் த்ரில்லர்களுக்கு முக்கிய லொகேஷன் ஹாம்பர்க் துறைமுகம்தான். வீடியோ விஷனிலும், டெலிவிஷனிலும் பார்த்திருப்பீர்களே''—

அவர் கூறியது உண்மைதான். பான் நகரிலும், ஹாம்பர்க்கிலும் ஹோட்டல் அறைகளில் டி. வி. யிலும் வீடியோவிஷனிலும் ஹாம்பர்க் துறைமுக வட்டாரங்களில் நடப்பதாய்ப் புனைந்து எடுக்கப்பட்ட திகில் படங்களே அதிகம் இடம் பெற்றிருந்தன.

கண்ணீர் மட்டத்திற்கு மேல் 60 மீட்டர் உயரத்தில் போடப்பட்டுள்ள கோல் ப்ராண்ட் உயர் பாலம் துறைமுகத்தின் கிழக்கு மேற்குப் பகுதிகளை இணைக்கிறது. இப்பாலம் ஓர் அதிசயக்காட்சி. எல்பே ஆற்றைக் குடைந்து நீர் மட்டத்துக்குக் கீழே போடப்பட்டுள்ள மற்றொரு அதிசயமாகிய எல்பே குகைப்பாலத்தின் (Elbe tunnel) மூலம் தினசரி எழுபதாயிரத்திற்கு மேற்பட்ட மோட்டார் வாகனங்கள் போய் வருகின்றன.

புதுமைகளைப் படைப்பதில் ஹாம்பர்க் மக்களுக்கு அதிக ஆர்வம் உண்டு. சாலையில் போய்க் கொண்டிருந்த போது எங்கள் ஜெர்மன் உதவியாளர் அருகே தென்பட்ட ஒரு பல மாடிக் கட்டடத்தைக் காண்பித்து, ''பலர் வியந்து பேச வேண்டுமென்பதற்காகவும் ஒரு புதுமையைச் செய்து காட்ட வேண்டுமென்பதற்காகவும் இந்தக் கட்டிடத்தை மேலேயிருந்து ஆரம்பித்துக் கீழே கொண்டு வந்து முடித்தார்கள்''— என்றார். ''அது எப்படிச் சாத்தியமாயிற்று? என்று கேட்டேன்.

''முதலில் சில அழுத்தமான காங்கிரீட் தூண்களை எழுப்பிக் கொண்டு அப்பறம் அதில் மேலிருந்து கீழாகக் கட்டினார்கள். இதன் பொறியாளர்கள் சவால் விட்டு அதைச் செய்து முடித்தார்கள். இதைக் கட்டிக் கொண்டிருந்த போதும், கட்டி முடித்த சிறிது காலத்திற்கும் மக்கள் இது பற்றிய ஆச்சரியப்பட்டுப் பேசிக் கொண்டிருந்தார்கள்.'' அறுநூறு வருடங்களுக்கு மேலாக நடக்கும் களியாட்டச் சந்தை (Fun fair) ஒன்றும் ஹாம்பர்க்கில் உள்ளது. அது மற்றோர் ஆச்சரியம்.

ஹாம்பர்க்கில் ஒருநாள் எப்படியாவது ஓர் இந்திய ரெஸ்டாரெண்ட் அகப்படுமா என்று முயன்றோம். என்ன ஆச்சரியம்! விசாரித்த உடனே 'இருக்கிறது' என்று பதில் வந்தது. அதைவிட ஆச்சரியம் நாங்கள் விசாரித்த டாக்ஸி டிரைவரே தாம் ஓர் இந்தியர் என்று மகிழ்ச்சியோடு எங்களிடம் தெரிவித்தார். தம் பெயர் உஸ்மான் என்றும் தமது சொந்த ஊர் குஜராத்தில் உள்ள சூரத் என்றும் எப்போதாவது இரண்டு மூன்று வருஷங்களுக்கு ஒருமுறை ஊருக்குப் போய்த் திரும்புவது உண்டு என்றும் கூறினார். ஹாம்பர்க்கில் சுமார் மூவாயிரம் இந்தியர்களுக்கு மேல் வசிப்பதாக உஸ்மான் தெரிவித்தார்.

'ஷாலிமார்' — என்ற பெயருடன் கூடிய ஒரு குஜராத்தி ரெஸ்டாரெண்டில் கொண்டு போய் விட்டார். அப்பளம், சப்பாத்தி, ஆலுகோபி, ரஸமலாய், புலவு என்று பெயர்கள் காதில் விழுந்தவுடன் எங்கள் குழுவுக்கு ஒரே மகிழ்ச்சி.

துறைமுகத்தின் அருகே உள்ள கோடௌன் கட்டிடங்கள், மண்டிகள், கூடப் பளிச் சென்றும் கலை அழகுடனும் விளங்கும் நகரம் ஹாம்பர்க். அழகிய விசாலமான பூங்காக்களும் பெரிய ஏரியும், எல்பே நீர் வழிகளும் நகருக்கு மிகவும் அழகூட்டுகின்றன. 'குக்கூ க்ளாக்' வாங்க வேண்டுமென்று 'டிபார்ட்மெண்டல் ஸ்டோர்'களில் சுற்றிப் பார்க்க நானும் நண்பர் அகர்வாலும் புகுந்தால் ஒரு தளம் முழுவதும் பல சைஸ்களில் குக்கூ (Cuckoo clock) கடிகாரங்களாகக் குவிந்திருந்தன. துறைமுக நகரமாகவும், ஃப்ரீ போர்ட்டாகவும் இருப்பதால் ஹாம்பர்க்கில் எதுவும் கிடைக்கிறது. எவ்வளவு வேணுமானாலும் கிடைக்கிறது.

'ஹாம்பர்க்'கில் உள்ள புகழ் பெற்ற ஆபராவில் 'ஜார் அண்ட் ஜிம்மர்மான்' என்ற இசைநாடகம் பார்த்தோம். ஜெர்மனி முழுவதும் இசை நாடகம், பாலே, பில்ஹார்மனி இசை, ஆகிய அரங்குகள் நிரம்பி வழிகின்றன. 'கினோ' (Kino) எனப்படும் சினிமா அரங்குகளில் இடமும் கூட்டமும் மிகமிகக் குறைவுதான். நம்மூரிலோ நேர்மாறான நிலைமை. சினிமாவில் தான் கூட்டம். கர்நாடக இசை, முதலிய கலாச்சார அரங்குகளில் கூட்டமே இருப்பதில்லை.

மேலும் இரண்டு நாட்கள் ஹாம்பர்க்கைச் சுற்றி சில இடங்களைப் பார்க்கும் திட்டத்தோடு அங்கே தங்கினோம். (தொடரும்)

---

கலைவாணரிடம் ஒருவர், வில்லுப் பாட்டு நிகழ்ச்சி நடத்தத் தேதி கேட்டார். செப்டம்பர் 9-ந்தேதி கட்டாயம் வேண்டுமென்றார். கலைவாணர் தேதியில்லை என்று வருத்தத்தோடு அவரிடம் சொன்னார். வந்தவர் மீண்டும், மீண்டும் வற்புறுத்தினார். பார்த்தார் கலைவாணர். காலண்டரில் செப்டம்பர் 9-ம்தேதி உள்ள தாளைக் கிழித்து அவர் கையில் கொடுத்துவிட்டார்!

—எஸ். வெங்கடராமன்.



## யோகாசன மகிமை

# பிராணாயாமம்

ஆன்ம உணர்வுகளைச் சீர் செய்து கொள்ள உதவுவது பிராணாயாமம். கோபம், ஆத்திரம் ஆகியவற்றைக் கட்டுப்படுத்த உதவும். களைப்பு மேலிடாது. உடலில் வலு ஏற்படும். மனத்தை ஒரு நிலைப்படுத்தி, சிந்திக்கும் திறனையும், அறிவாற்றலையும் வளர்த்துக் கொள்ள முடியும்.

மேலும் உடல் ஆரோக்கியத்தில் பாதிக் கோளாறுகள் சீரான சுவாசப் பயிற்சி இல்லாததாலேயே ஏற்படுகின்றன.

சந்தியாவந்தனத்தில், காயத்ரி மந்திரம் ஜபிப்பதற்கு முன்னால் பத்து முறை பிராணாயாமம் செய்ய வேண்டும் என்று இருக்கிறது. இதை யாருமே முறைப்படி செய்வதில்லை. அவசர அடியாக மூக்கையும் காதையும் தொட்டு ஜீவனில்லாத மந்திர உச்சாடனமாகப் பண்ணி விடுகிறார்கள்.

மந்திரத்தை மனத்துக்குள் சொல்லியவாறே, நிதானமாக மூச்சை இடது நாசியால் வெளியே விட வேண்டும். அப்படியே மூச்சை நிறுத்திச் சற்று இடைவெளிவிட்டு மறுபடி மந்திரத்தை மனத்துக்குள் உச்சரித்தபடியே அதே இடது நாசிமூலம் நிதானமாக மூச்சை உள்ளுக்கு இழுக்க வேண்டும். அடுத்த முறை சொல்லும்போது சுவாசத்தை நெஞ்சில் தேக்கிக் கொள்ள வேண்டும். மறுபடி மந்திரம் சொல்லும் போது அதே நிதானத்தோடு மூச்சை வலது நாசி வழியாக வெளிவிட வேண்டும். நெஞ்சிலிருநது காற்றை முற்றிலும் வெளிப்படுத்தி சற்றே மூச்சை நிறுத்தி இடைவெளி விட்டு மீண்டும் அதே வலது நாசி மூலம் மூச்சை உள்ளுக்கிழுக்க வேண்டும். இப்படியே பத்து முறை மாறிமாறிச் செய்ய வேண்டும். மாறிமாறி நாசியை மூடிக் கொள்ள மோதிர விரலையும் கட்டை விரலையும் பயன்படுத்த வேண்டும். வடமொழி மந்திர உச்சாடனம் தெரியாதவர்கள், விரும்பாதவர்கள் முருகா முருகா என்றோ பஞ்சாட்சரத்தையோ நிதானமாகப் பத்து முதல் பதினைந்து முறை சொல்லி அதற்கேற்பப் பிராணாயாமம் பழகலாம்.

பத்மாசனத்தில் நிமிர்ந்து அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டவாறே, மூச்சை உள்ளுக்கு இழுத்து, அடக்கி, பிறகு வெளியே விடுவது. விஞ்ஞான ரீதியாகப் பார்த்தால் நுரையீரல் நன்கு விரிவடைகிறது. தூய காற்று நுரையீரலில் கண்ணுக்குத் தெரியாத இண்டு இடுக்குகளிலெல்லாம் பரவி அங்கு மயிரிழை ரத்தநாளங்களில் பாயும் இரத்தத்துக்கு பிராணவாயுவைக் கிரகித்துக் கொள்ள உதவுகிறது. இதனால் ரத்தம் தூய்மை பெறுகிறது. உடன்விளைவாக உடல் முழுவதுமே ஆரோக்கியம்.

ஜலதோஷம், மூக்கடைப்ப, நெஞ்சில் கபம், இருமல் போன்றவையெல்லாம் விடாமல் பிராணாயாமம் செய்பவரை நெருங்காது. அப்படியே வந்தாலும் ஏதோ ஓரிரு நாட்களில் தானே ஓடிப்போய்விடும். மனத்தைத்தீயவழிகளில் செல்லாமல் அடக்கி ஆளவும் முகத்தில் தேஜஸ் பொலியவும் பிராணாயாமம் உதவும்.

பிராணாயாமம் என்பது படிப்பதற்கு மிகவும் சுலபமாகத் தோன்றலாம். ஆனால் ஆசனப் பயிற்சியை விட மிகவும் சிரமசாத்தியமானது. **தக்க ஆசிரியரின் வழிகாட்டலோடு** பழக வேண்டும்.

மிகவும் நிதானமாகச் செய்ய வேண்டிய ஒன்று பிராணாயாமம். உடம்பு அசையக் கூடாது. உடம்பை வருத்திக் கொள்ள வேண்டியதில்லை. மூச்சை உள்ளிழுக்கும் போதும் வெளி விடும் போதும் தடங்கல் இல்லாமல் ஒரே சீராக இருக்கவேண்டும். பிராணாயாமம் செய்யும்போது, புறச்சூழலை அறவே மறந்து விட வேண்டும். ஒரு மிருதுவான தரை விரிப்பில் பத்மாஸனத்தில் அமர்ந்து பயில வேண்டும். கண்கள் மூடியிருக்க கவனம் முழுவதும் சுவாசத்திலேயே ஒன்றியிருக்க வேண்டும்.

தகவல் உதவியவர் **யோகாலயா சுப்பிரமணியம்; திரு. எஸ். ஸ்ரீபதி.**

கட்டுரை: சுப்ரபாலன்

படம்: தாமு

படத்தில் பிராணாயாமம் செய்பவர்: ஜி. எஸ். உதயகுமார்



4

**பா**லா பதறினான். முன்வரிசையின் ஒரு கோடி இருட்டு முகங்கள் இவர்களைத் திரும்பிப் பார்த்தவுடன் பதற்றம் இன்னும் அதிகமாயிற்று. ரகசியமாய்க் கிளம்பி வந்து சந்தோஷம் அனுபவிக்கப் போக அது இப்போது பட்டவர்த்தனமாய்க் கொட்டை எழுத்துக்களில் அரங்கமெங்கும் ஒலிபரப்பாகப் போகிறதே என்ற பதைப்பு நெஞ்சில் உதைத்தது. உடனே உதவி தேடி அனுசூயாவை சகஜ நிலையில் பார்த்தால் போதும் போலிருந்தது.

''ஸார்...'' என்றான் திரும்பியவனைப் பார்த்து. ''திடீர்னு இவங்க மயக்கமாயிட்டாங்க... கொஞ்சம் பார்த்துக்குங்க... நான் வெளியே போய்த் தண்ணி எடுத்துட்டு வந்துடறேன்...'' என்று சொல்லிவிட்டு, பதிலை எதிர்பார்க்காமல் பரபரப்பாய் வெளியே ஓடினான். வராந்தா காலியாய் இருந்தது. டிக்கெட் கிழித்தவனைக் காணவில்லை. சற்றுத்தள்ளி மேலே ஆபரேடர் அறை.

அனுமதியற்ற பிரவேசத்தைக் கண்டித்த சிகப்பு எழுத்துக்களை அலட்சியம் செய்து கதவைத் திறந்தான். கார்பன் எரிந்து கொண்டிருக்க, படம் ஓடிக் கொண்டிருக்க, கண்ணாடிச் சதுரம் வழியே வெளிச்சம் வெளியே திரைக்குப் பாய்ந்து கொண்டிருந்தது. கதவு திறந்த சத்தம் கேட்டு ஆபரேடர் திடுக்கிடலோடு திரும்பினார்.

''பால்கனி பாக்ஸுக்கு லைட் போடுங்களேன். கூட வந்தவங்க மயக்கமாயிட்டாங்க...''

# நிலவே நீயும் விலகாதே

**சுபா**

பாலாவின் குரலில் அவசரம் கண்டு அவர் ஸ்டூலிலிருந்து இறங்கினார். ''பையன் இல்லை?'' என்று கேட்டுக் கொண்டே வெளியே வந்தார். மரக்கலவரோடு பொருத்தியிருந்த ஒரு பலகைக் கதவைத் திறந்து ஒரு ஸ்விட்சைத் தட்டினார்.

''தண்ணி எங்க இருக்குங்க?''

''அதோ எவர்சில்வர் டிரம்ல...''

பாலா ஓடினான். கவிழ்த்திருந்த கண்ணாடி டம்ளரில் தண்ணீரைப் பிடித்துக் கொண்டு ஓடினான்.

விளக்கு எரிந்து கொண்டிருந்தது. மொத்தம் இருந்த நான்கு பேரும் அனுசூயாவின் பக்கமே கவனத்தைப் பதித்திருந்தார்கள். ஒரு வயதான அம்மாள் அனுசூயாவின் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு அனுசூயாவின் பின்னந்தலையைத் தாங்கியிருந்தாள். கன்னத்தில் 'பட்' 'பட்' என்று அறைந்தாள். பாலா தண்ணீரை உள்ளங்கையில் வாங்கி அனுசூயாவின் முகத்தில் பூவாளி நீர் மாதிரி தெளித்தாள்.

'சிலீர்' என்ற சிலிர்ப்புடன் இமைகளுக்குள் விழிகள் அசைந்தன. அனுசூயா மெல்ல கண் திறந்தாள். உடன் திடுக்கிட்டாள். உடன் முகம் சிவந்தாள்.

''பாலா.''

''அனு... அனு... ஒனக்கு ஒண்ணும் இல்லியே... நான் பயந்தே போயிட்டேன் அனு...''

''சாப்பிடலியாம்மா... இங்க வந்து மயக்கம் போட்டுட்டியே...'' என்றாள் அந்த அம்மா ஆதரவான குரலில்.

''இல்லீங்க. ஒடம்பு சரியில்ல...'' தக்கித் தக்கி வார்த்தைகள் வெளியே விழுவதற்குள் அனுசூயாவிற்கு வியர்த்துவிட்டது. ஏற்கெனவே முகம் நிறையத் தண்ணீர்ப் பொட்டுக்கள் ஒன்று சேர்ந்து கோடு கோடாய் இறங்க ஆரம்பித்திருந்தன. கைப்பையைத் திறந்து சின்ன டவலை எடுத்து நெற்றிப் பொட்டையும் சேர்த்து அழுத்தத் துடைத்துக் கொண்டாள்.

''வீட்டுக்குப் போலாம் வாங்க'' என்று வெட்கையில் வெந்து போன முகத்தோடு அனுசூயா பரபரப்பாய் எழுந்து கலைந்த உடைகளைச் சரி செய்து கொண்டாள்.

''பாத்து அழைச்சிட்டுப் போப்பா... ஜாக்கிரதை...''

அவரவர்கள் மறுபடியும் திரையைப் பார்த்துக் கவனத்தைப் பதித்தார்கள். வெளியே ஆபரேட்டர் நின்றிருந்தார்.

''ஒண்ணும் இல்ல சார்... சாதாரண மயக்கம் தான். லைட்டை அணைச்சிடலாம்...''

கவலை இழந்தவராய் அவரும் நகர்ந்தார். படிகளில் மெதுவாக இறங்கினார்கள்.

''என்ன அனு இப்படி ஆயிடிச்சி?''

''பயந்துட்டீங்களா பாலா?''

''சாதாரணமாகக் கேட்டுட்ட. நான் நடுங்கிப் போனது எனக்குத்தான் தெரியும்! நெஜமாவே நீ சாப்பிட்டியா சாப்பிட லையா?''

''சொல்றேன் பாலா. நீங்க நெனைக்கிற மாதிரி சாதாரண மயக்கம் இல்ல இது.''

வெளியே போக்குவரத்து மெலிந்திருந் தது. ஆட்டோ ஒன்று ஆர்வமாய்ப் பக்கத் தில் வந்து 'டர், டர்' என்று நிதானித்தது.

''ஏறிக்குங்க பாலா... 'டிரைவ் இன்' உட்லண்ட்ஸ்ல போய்ப் பேசுவோம்...''

•

**கா**ஃபியைச் சிந்தாமல் இரண்டு கைக ளிலும் ஏந்தி வந்து மேஜை மேல் வைத் தான் பாலா.

''என்னமோ சொல்ல ஆரம்பிச்சி யேடா...''

''வெளிய பார்த்தா நான் ரொம்ப ஹெல்த்தியா இருக்கேன்ல பாலா... உள் ளுக்குள்ள எனக்கு ஒரு சின்ன ட்ரபிள் இருக்கு பாலா...''

''என்னது?'' என்றான் பரிவாக.

''எனக்கு ஹார்ட்ல ஒரு சின்னப்ராப்ளம் பாலா...''

''என்னது?'' என்று லேசாய் அதிர்ந்த குரலில் கேட்டான்.

''ஆமா பாலா... எனக்குப் பத்து வயசு நடக்கறப்ப ஒருநாள் சினிமாவுக்குப் போனேன் பாலா கூட அப்பா, அம்மா



எல்லாம். அப்பாவுக்கு அப்ப கடலூர்ல வேலை. அங்க ஒரு ஓபன் ஏர் தியேட்டர்ல தான் படம். விண்ட்டர் சீசன் வேற. திடீர்னு கைகால்லாம் நடுங்க ஆரம்பிச்சி அப்படியே நின்னுப் போயிடிச்சி. மடக்கின விரலை நீட்ட முடியலை... நீட்ன காலை மடக்க முடியலை... அப்பா என்னை அப்படியே தூக்கிக்கிட்டு டாக்டர் வீட்டுக்கு ஓடினாரு... அப்பத்தான் எனக்கு இப்படி ஒரு விஷயம் இருக்கறதே தெரியும்.... ருமாட்டிக் மைட்ரல் ஸ்ட்ராஸிஸ்னு பேரு இதுக்கு... வாயில நுழைல இல்ல?''

''எங்கிட்ட சொல்லவே இல்லையே அனு...''

''சந்தோஷமான சமாச்சாரம் இல்லியே பாலா. குளிர்காலம் வந்தா மூச்செரைக்கும். இல்ல. ரொம்ப எமோஷனலா ஆயிட்டேன்னு மயக்கம் வரும்... மத்தபடி ஒண்ணும் ஆகாது. ஈ. ஸி. ஜி. எல்லாம் எடுத்துப் பாத்துட்டாங்க. டைஜாக்ஸின். லானிக்ஸ்னு மருந்து வைத்தியமெல்லாம் கூடவே நடக்குது.''

''ச்சே... நான் பயந்தே போயிட்டேண்டா... எங்கிட்ட முன்னாடியே ஒரு வார்த்தை சொல்லியிருக்கக் கூடாது...''

''ஏன்... நான் வியாதிக்காரின்னு பழக தப்பவே நீங்க நெனைச்சிக்கறதுக்கா? காப்பி ஆறிடும்... எம்மூஞ்சியப் பாக்காமக் குடிங்க...''

''என்னைத் தப்பா நெனைச்சிட்ட அனு.''

''பழைய எக்ஸ்பீரியன்ஸ் பாலா... ஜாதகத்திலயோ, நட்சத்திரத்திலயோ மட்டும் எடைஞ்சல் இல்ல எனக்கு. உடம்புலயும் தான். இது தெரிஞ்சவுடனே பொண்ணு பாக்க வரவன்லாம் சொல்லாம கொள்ளாம எழுந்து ஓடிடுவான். எனக்குக் கல்யாணம் ஸெட்டில் ஆகாமத் தள்ளித் தள்ளிப் போயிட்டிருக்கறதுக்கு இதுவும் ஒரு காரணம் பாலா... இது சின்ன விஷயந்தான்... பயப்படறதுக்கு ஒண்ணுமில்லன்னு டாக்டர் சொல்றாரு... ஆனா யாருக்குப் பொறுமை இருக்கு, இவ்வளவையும்தெரிஞ்சுக்கிறதுக்கு? கல்யாணம் பண்ணப்புறம் வாழ்நாள் பூரா இவ படுக்கைல மூச்சிரைச்சிக்கிட்டு இருப்பா. இவளுக்கு நாம நர்ஸ் வேலை பண்ண வேண்டி வருமோன்னு கையை விரிச்சிடறாங்க...''

''இப்ப டாக்டரைப் போய்ப் பார்க்கணுமா அனு?''

''நாந்தான் இது ரொம்ப சின்ன விஷயம்னு சொன்னேனே பாலா. இன்னிக்குக் கொஞ்சம் அதிகமாகவே உணர்ச்சி வசப்பட்டுட்டேன்... நீங்க கிஸ் பண்ணினீங்களா... மொதத் தடவைங்கறதால எக்கச்சக்கமா பயம்...

பாலா கப்பை நகர்த்திவிட்டு மேஜைக் கறையை வெறித்தான். சட்டென்று எதையோ சொல்ல நினைத்து மௌனமானான்.

''என்ன பாலா?''

''நம்ப விஷயந்தான் அனு... பிரேமாவுக்குக் கல்யாணத்தைச் சீக்கிரமா முடிச்சிடணும்... அம்மா இருந்தா இந்நேரம் முடிச்சிருப்பாங்க. அவங்க பார்த்து வச்சி ஜோசியர் நல்லாப் பொருந்தி இருக்குதுன்னு சொன்ன வரன் ஒண்ணு இப்ப கிட்டக்கிட்ட வருது... செட்டில் ஆனாலும் ஆயிடும்...''

''சந்தோஷமான விஷயந்தானே பாலா.''

பாலா மெல்லத் தன் பாதத்தை நீட்டி அவள் பாத விரல்களைப் பிடித்து அழுத்தினான். லேசாகக் கணுக்காலில் புரண்ட கொலுசை வருடிக் கொடுத்தான்.

''சின்னது இப்ப ஆறாவது படிக்குது... பாவம் ஏற்கெனவே அம்மா இல்லாத கொறைவேற... அதைப் போட்டு எவ்வளவு வேலை வாங்க முடியும்? அப்பாவுக்குச் சுத்தமா சமையல் வேலெல்லாம் எதுவுந்தெரியாது. அம்மாவே எல்லா வேலையையும் தலைமேல் இழுத்துப் போட்டுட்டுச் செய்வாங்களா... எங்க வீட்ல நாங்க பொம்பிளைங்கள நம்பியே இருந்துட்டோம்... இப்ப பிரேமா கல்யாணம் பண்ணிக்கிட்டுப் போயிட்டா வீட்டைக் கவனிச்சுக்க 'ஒரு பொண்ணு இல்லாமப் போயிடும். அதனால பிரேமாவுக்கும் முன்னாடியே எனக்குக் கல்

### அது என்ன பதினான்கு?



கைகேயி இராமனைப் பதினான்கு ஆண்டுகள் காட்டுக்கு அனுப்பினாள் - அது என்ன கணக்கு பதினான்கு?

அந்தக் காலத்தில் திருமண வயது ஆண்களுக்குப் பதினாறு என்றும், பெண்களுக்குப் பன்னிரண்டு என்றும் நிர்ணயிக்கப் பட்டிருந்தது. சிலப்பதிகாரத்தில் கூட கண்ணகியின் திருமணத்தின் போது அவள் 'ஈராறு ஆண்டு அகவையினள்' என்றும், கோவலன் 'ஈரெட்டு வயதினன்' என்றும் வர்ணிக்கப் படுகிறார்கள். இந்த இரண்டு வயதுகளின் சராசரி பதினான்கு. அதாவது, பதினான்கு ஆண்டுகளில் அடுத்த தலைமுறை உருவாகி விடுகிறது. எனவே இராமன் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் முடித்து வரும்போது கோசலத்தில் இராமனை அறியாத, பரதனை மட்டுமே அறிந்த ஒரு புதுத் தலைமுறை உருவாகி விடும். இந்தத் தீய எண்ணத்துடன்தான் கைகேயி இராமனைப் பதினான்கு ஆண்டுகள் காட்டுக்கு அனுப்பும்படி தசரதச்சக்கரவர்த்தியிடம் வரம் வேண்டினாள்.

ஓர் உபன்யாசத்தில் கேட்டு ரசித்தவர்: ரவி.

யாணம் பண்ணி வைக்கச் சொல்லி சொந்தக்காரங்கள்ளாம் அப்பாக்கிட்ட சொல்லிட்டாங்க போலிருக்கு... அப்பா அதைப் புடிச்சிக்கிட்டுத் தெனம் ஒரு ஜாதகம் கொண்டு வந்துடறாரு... தங்கச்சிக்குக் கல்யாணம் ஆற வரைக்கும் எங்கல்யாணத்தைப் பத்தி வாயைத் திறக்காதீங்க.. பணத்துக்கு எங்க போறதுன்னு பெரிசா ஒரு போடு போட்டு அவரை இப்போதைக்கி அடக்கி வெச்சிருக்கேன்... பிரேமா கல்யாணம் ஆனதும் இந்த விஷயம் திருப்பியும் டிடயங்னு பூதம் மாதிரி பெரிசா வெளியில வந்துடும்...''

''பேசாம அப்பா சொல்ற பொண்ணைக் கட்டிக்குங்க பாலா...''

''வெளையாடறியா அனு?''

''இல்ல பாலா நெஜமாத்தான் சொல்றேன். நாம்ப வேற வேற ஜாதியில மாட்டிக்கிட்டோம். எங்க வீட்ல ஒத்துக்கவே மாட்டாங்க...''

''ஜாதியாவது, மண்ணாங்கட்டியாவது.''

''ஒத்துக்க மாட்டாங்க பாலா... நம்ப ரெண்டு பேரையும் சேர்த்துப் பார்த்துட்டு ஏற்கெனவே எங்க தூரத்துச் சொந்தக்காரங்க வீட்லே போய்ச் சொல்லிட்டாங்க. அம்மா பக்கத்தில வந்து ஒக்காந்துக்கிட்டு 'பொறுத்துக்கம்மா, ஒனக்கு நாங்களே யாரையாவது பாத்துப் பண்ணி வைக்கிறோம்... அவசரப்பட்டுக்கிட்டு எவனையாவது இழுத்துட்டு ஓடாதேன்னு' கொஞ்சம் வேடிக்கையா, கொஞ்சம் குத்தலாச் சொல்லியிருக்காங்க.''

''பெரியவங்களுக்கெல்லாம் புத்தியே கெடையாது.''

''அவங்க பயப்படறதிலயும் நியாயம் இருக்கு பாலா... எனக்குக் கீழ ரெண்டும் பொட்டச்சிங்க... அக்காக்காரி எவனோ வேற ஜாதிக்காரனோட ஓடிப் போயிட்டான்னு ஊர்ல பேசிக்கிட்டாங்கன்னு அவங்களைச் சேந்தறதுக்கு ஒரு ஆம்பிளையும் வரமாட்டானேங்கற பயம் அவுங்களுக்கு.''

''நம்ப நாள்ல ஜாதில்லாம் பெரிய பிரச்சினையே இல்ல அனு...''

''சொல்லாதீங்க பாலா... லவ்வுக்கு வேணும்னு ஜாதி பார்க்க மாட்டாங்க நம்ப ஜெனரேஷன் ஆளுங்க... கல்யாணம்னு வரப்ப அவுங்களும் பொண்ணோட ஜாதி, பூர்வீகம், அவங்க வீட்ல எல்லாமே நியாயமான கல்யாணங்கதான ஆயிருக்குதுன்னுல்லாம் பார்க்கறாங்க... உங்க தங்கச்சி யாராவது ஒருத்தனைக் கட்டிக்கிறேன்னு சொன்னா ஒத்துக்குவீங்களா?''

''நிச்சயமா நான் ஒத்துக்குவேன் அனு... அப்பாவுக்குத் தான் மனசு கேக்காது... கூடாதுன்னு சொல்லுவாரு...''

''அந்த மாதிரிதான் பாலா... பெரியவங்களே. அப்படித்தான்.''

''ஒரு நிமிஷம்...'' என்று பக்கத்துக் கடைக்குப் போனான். ஒரு ஃபைவ் ஸ்டார் சாக்லேட்டை வாங்கி வந்து அவளிடம் நீட்டினான்.

''எதுக்கு பாலா?'' என்றாள் அனுசூயா ஆச்சரியக் கண்களுடன்.

''ஒரு ஸ்வீட் ஹாப்பி நியூஸ்...''

''அப்படின்னா...'' ''ஹோ..., ப்ரமோஷன் கெடைச்சிடுச்சா பாலா... கங்கிராட்ஸ்...''

''ரொம்ப சந்தோஷப்பட்டுக்காத... நான் வேணும்னு சொல்லிட்டேன்...''

''ஏம் பாலா...'' என்றாள் சட்டென்று அதிர்ந்து போன குரலில்.

''கல்கத்தாவுக்குப் போகணுமாம்கூடவே. பிரேமா கல்யாணம், நம்ப கல்யாணம் எல்லாத்தையும் வெச்சிக்கிட்டு எப்படி இதை ஒத்துக்கறது... நீ மட்டும் 'ம்'னு சொல்லு... நாளைக்கே ரிஜிஸ்ட்ரார் ஆஃபீஸுக்குப் போய் வேண்டிய ஏற்பாடெல்லாம் பண்ணிடறேன்... கல்யாணம் பண்ணிப்போம்... பிரேமா கல்யாணம் முடிஞ்சவுடனே நாம்ப எல்லாரையும் மறந்துட்டு கல்கத்தாவுக்கு வண்டி ஏறிடலாம்.... என்ன?''

அனுசூயா இன்னும் வாடிப் போன முகத்தோடு இருந்தாள்.

''நீங்க ப்ரமோஷனுக்கு ஒத்துக்குங்க பாலா. வேற யாரையாவது கட்டிக்கிட்டு கல்கத்தாவுக்குப் போங்க... ப்ளீஸ்...''

''வேற பேச்சு இருந்தாப் பேசு அனு...''

''இல்ல பாலா... எங்க வீட்ல சீரியஸா ஒரு வரனைத் தொரத்திக்கிட்டிருக்காங்க... எப்படியாவது முடிச்சிடணும்னு... பையன் என்ஜினியராம்... ஃபோட்டோ கூடக் கொண்டாந்து காமிச்சிருக்கார் தரகர். இது செட்டில் ஆச்சின்னு எங்க வீட்ல எனக்குப் புடிக்குதோ, இல்லையோ இவன் கழுத்தில என்னைக் கட்டப் பாப்பாங்க... அப்புறம் ஒங்க மனசு ரொம்பக் கஷ்டப்படும்...''

''இன்னும் செட்டில் ஆகல இல்ல...?''

''இல்ல...''

''பின்ன வுடு... அப்புறம் பாத்துக்கலாம்... பையன் பேர் என்ன?''

''குருமூர்த்தி...''

''ஃபோட்டோல நல்லா இருக்கானா?'' என்று கேட்டான் பாலா லேசான பொறாமையோடு.

''ஜாம் ஜாம்னு'' என்று அனுசூயா புன்னகைத்தாள்.

**அ**னுசூயா தெருமுனை திரும்புகிற போதே பார்த்தாள். வாசல் கேட்டருகிலேயே கஸ்தூரி நின்றிருந்தாள். இவளைப் பார்த்ததும் ஓடிவந்தாள்.

''என்ன அனுசூயா இவ்வளவு நேரம்... நாங்க ரமா வீட்டுக்கே வந்து பாக்கலாம்னு நெனைச்சிட்டிருந்தோம்.''

''என்ன விஷயம்...? எதுக்கு என்னைத் தேடணும்?''

''அவங்க வீட்லேர்ந்து எல்லாம் வந்திருக்காங்க...''

''யார் வீட்லேர்ந்து...?''

''அந்த குருமூர்த்தி வீட்லேர்ந்துதான். அவன், அவங்கம்மா, ரெண்டு தங்கச்சிங்க எல்லாருமே வந்திருக்காங்க. பொண்ணு பாக்கறதுக்கு... சீக்கிரம் வந்து நல்ல டிரஸ்ஸா மாத்திக்க அனுசூயா... ரொம்ப நேரமாக் காத்திட்டிருக்காங்க...''

(தொடரும்)



Illustration by Peter Clarke

## பாகிஸ்தானில் அரசியல் கைதிகள்

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னால் மகாலே பிரபு இந்திய சட்ட விதிகளைக் கால மாறுதல்களுக்குட்பட்டுத் திருத்தியமைத்துத் தந்தார். சுதந்திரத்துக்குப் பின் இச்சட்டத்தையே இந்தியாவும் பாகிஸ்தானும் பின்பற்றி வந்தன. இன்றளவும் இந்தியாவில் மாறாதிருக்கும் சட்டவிதிகள் பாகிஸ்தானில் ஜியா உல் ஹக்கின் கரங்களில் சிக்கிச் சின்னாபின்னப்பட்டுப் போய் விட்டன. பாகிஸ்தானில் அராஜகத்துக்கும், வளர்ந்து வரும் ஜியா எதிர்ப்புக்கும் காரணம் 'சட்டம் என் கையில்' என்று ஜியா இறுமாந்திருப்பதுதான்.

சமீபத்தில் பாகிஸ்தான் சென்று திரும்பிய **ஜியாஃபரி மூர்ஹவுஸ்** என்ற ஆங்கிலேய எழுத்தாளர் தம் அனுபவங்களை To the frontier' என்ற புத்தகமாய் எழுதியுள்ளார். அதில் காணப்படும் சில தகவல்கள் பாகிஸ்தானில்மனிதர்களை எவ்வளவு கேவலமாக நடத்துகிறார்கள் என்று காட்டுகிறது. அத்தனை கட்டுப்பாட்டையும், சித்திரவதையையும் பொருட்படுத்தாமல் சிலர் இன்னமும் உரிமைப் போராட்டத்தில் தொடர்ந்து ஆத்மார்ப்பணம் செய்து வருகிறார்கள் என்பது மனித இனத்தின் சுதந்திர வேட்கையைத்தான் உணர்த்துகிறது. அடக்குமுறை எங்கிருக்கிறதோ அங்கெல்லாம் எதிர்ப்பு இருக்கும் என்ற சரித்திர உண்மைக்குச் சான்று பகர்கிறது.

ஹபீப் ஜலீப் என்ற கவிஞர் எழுதிய கவிதை வரிகள் இவை:

கல்லை வைரமென்று அழைக்க முடியுமா?
மேகத்திட்டை சுவர்க்கமெனக் கொள்ள முடியுமா?
இருளை ஒளியென்றால் அது மெய்யாகுமா?

இதை எழுதியதற்காகச் சிறை வைக்கப்பட்டார் ஜலீப். ரகசியம் இதுதான்: ஜியா என்ற சொல் உருதுவிலும், அராபிய மொழியிலும் 'ஒளி' என்று பொருள்படும்! தொடர்ந்து பலமுறை சிறைக்குச் சென்று திரும்பிய ஹபீப் ஜலீபுக்குத் தாம் எத்தனை முறை சிறைவாசம் அனுபவித்தோம் என்ற எண்ணிக்கை கூட விட்டுப்போய் விட்டது!

புட்டோ ஆரம்பித்த P.P.P. கட்சியை ஆதரித்தார்அப்துல் ஹலீம்(கற்பனைப் பெயர்)

## சித்திரவதையை சகித்து...
## சர்வாதிகாரத்தை எதிர்த்து...

என்ற எழுத்தாளர். இவர் ஜியாவின் அயல் நாட்டுக் கொள்கையை (குறிப்பாக அமெரிக்கக் கூட்டுறவை) வன்மையாகத் தாக்கினார். அதற்கு அவர் கூறிய காரணம்: ''மனித உரிமைக்கும், எண்ணெய்க்கும் (பெட்ரோலியம்) இடையே தேர்வு செய்ய வேண்டுமானால் மேற்கத்திய நாடுகள் எப்போதும் எண்ணெயைத்தான் தேர்ந்தெடுக்கின்றன.''

பல முறை எச்சரிக்கப்பட்ட பிறகும் அப்துல் ஹலீம் தொடர்ந்து எழுதினார். ஓரிரவு லத்திகளும் துப்பாக்கிகளும் ஏந்தி வந்த போலீஸார் அவர் கண்களையும், கைகளையும் கட்டி அவரை இழுத்துச் சென்றனர். ஒரு குடிசை போன்ற மண் சுவருடைய கட்டிடத்துக்கு அவரை அழைத்துச் சென்று சம்பந்தமில்லாத விஷயங்களைப் பற்றி அவரைக் கேள்வி மேல் கேள்வி கேட்டனர். அவருடைய காபூல், லிபியா பயணங்கள் பற்றி, ஆப்கானிஸ்தானிலிருந்து ஆயுதங்கள் கொண்டு வந்தது பற்றி புட்டோவின் மனைவியையும் மகளையும் சந்தித்தது பற்றி... அப்துல் ஹலீம் பாகிஸ்தான் எல்லையைக் கடந்ததில்லை. புட்டோவை அவர் பார்த்ததே இல்லை.

திடீரென்று அவரைக் கீழே தள்ளி மூச்சு முட்டும் வரை நெஞ்சில் மிதித்தனர் போலீசார். ஹலீம் மயக்கமடைந்தார். நினைவு திரும்பியதும் மீண்டும் சித்திரவதை. தரையில் குப்புறப் படுக்க வைத்துக் கால்களை அகட்டி இழுத்து முறுக்கினர். சில மணி நேரங்கள் கழித்ததும் அவரை நிற்கவைத்து விலங்கு பூட்டிய கைகளைத் தலைக்கு மேல் தூக்கிப் பிடிக்கச் செய்து ஒரு கழியைக் கழுத்துக்கும் கைகளுக்கும் இடையே பொருத்தினர். இந்தக் கழியிலிருந்து இருபது கிலோ எடையுள்ள ஒரு கல்லைக் கட்டித் தொங்க விட்டனர். இந்த நிலையில் அப்துல் ஹலீம் நிற்கையில் இருபுறங்களிலிருந்தும் லத்திகள் அவரை விளாசின. பதினைந்து நாட்களுக்கு ஒவ்வொரு நாளும் பல முறை இந்தப் பிராண அவஸ்தை தொடர்ந்தது. இரவில் அவரைப் படுக்க விடாமல் நிற்க வைத்துக் கால்களைச் சங்கிலிகளால் பிணைத்து வைத்தனர்.

பிறகு புதிய சித்திரவதைகள் ஆரம்பமாயின. மல்லாக்கவும், குப்புறவும் மாற்றி, மாற்றிப் படுக்கவைத்து அப்துல் ஹலீம் மீது ஒரு மர உருளையை அப்பளமிடுவதுபோல் உருட்டி அழுத்தித் தேய்த்தனர். மர்மப் பகுதியில் கயிற்றைக் கட்டி ரத்தம் கசியும் வரை இழுத்தனர். இதே போன்ற சித்திரவதைகளால் துன்புறுத்தி அவரைச் சாகவும் விடாமல் தொடர்ந்து நரகத்தை அனுபவிக்கச் செய்தனர்.

அப்துல் ஹலீமை அழைத்துச் சென்ற இடங்களில் ஒன்று லாகூர் செங்கோட்டை. இங்கு மூன்றடிக்கு ஆறடி அறை ஒன்றில் வைக்கப்பட்டார். பகலில் அவரைத் தூங்க விடவில்லை. இரவில் குறுகலான மூடிய பாதை ஒன்றில் நிற்கவைத்து, அங்கிருந்த காற்றை உறிஞ்சி வெளியே இழுத்து, சூனியத்தை உண்டாக்கி, மூச்சு விட அவர் திணறிய போது மீண்டும் அவரை வெளிக் கொணர்ந்தனர்.

அங்கிருந்து அக்பர் கோட்டைக்குக் கொண்டு செல்லப்பட்டார் அப்துல் ஹலீம். அவர் வீட்டை விட்டு வந்து நான்கு மாதங்கள் ஆகிவிட்டிருந்தன. அக்பர்கோட்டையில் ஷாஜஹான் அமைத்த காதல் சின்னமான கண்ணாடி மாளிகைக்கு நூறு கஜங்களுக்கு அப்பால் விவரிக்க முடியாத கொடுமைகள் தொடர்ந்தன. இதைப்பற்றி ஒன்றும் அறியாத சுற்றுலாப் பயணிகள் சரித்திரச் சின்னங்களைக் கண்டு பூரித்துக் கொண்டிருந்தனர். சீக்கிரமே மரண தண்டனை விதிக்கப்பட்ட கைதிகள் இருந்த சிறைக்கு மாற்றப்பட்டார் அப்துல் ஹலீம்.




கருத்து: எம்.ஐ.லியாகத் அலி.

**1978**-ல் மதுரையில் தி. மு. க. வினர் பிரதமர் இந்திரா அவர்களுக்குக் கறுப்புக் கொடி காட்டிய போது மதுரைமுத்து அ. தி. மு. க. வில் இருந்தார். அந்த இடத்துக்கு ஏதாவது அசம்பாவிதம் நடந்துவிடப் போகிறதே என்று காரில் விரைந்தவரை, சாலையில் தடுத்து நிறுத்தினார்கள் தி.மு.க. வினர். கார் கண்ணாடிகள் உடைக்கப்பட்டன. காரிலிருந்து வெளியில் இறங்கி வந்தார் முத்து. சட்டையைக் கழற்றினார். தாக்கியவர்களைப் பார்த்து "உங்களில் யாருக்காவது தைரியம் இருந்தால் ஒவ்வொருவராகச் சண்டைக்கு வாருங்கள்" என்று கர்ஜித்தவுடன் தாக்கியவர்கள் பின்வாங்கினார்கள். இப்படிப்பட்ட சம்பவங்கள் மதுரைமுத்துவின் வாழ்க்கையில் ஏராளம்.

## மறக்க முடியாத மதுரை முத்து



சாதாரண மில் தொழிலாளியாக இருந்த போது தி. க., தி. மு. க. கூட்டங்களில் பேசுவதற்காக ஈரோடு, சேலம், கோயமுத்தூர் பக்கம் போனால், கூட்டத்தில் பேசுவதற்காகக் கொடுத்த பணத்தில் மிச்சம் பிடித்து சேலை, வேட்டிகள் போன்றவைகளை வாங்கி வருவார். தீபாவளி, பொங்கல் போன்ற சமயங்களில் அவரது மனைவி அந்த சேலை, வேட்டிகளை வீட்டைச் சுற்றியுள்ள ஏழை மக்களுக்குத் தவணை முறையில் விற்பனை செய்வார்.

மதுரை மில்களில், தொழிற்சங்கங்களில் கம்யூனிஸ்ட் ஆதிக்கம் அதிகமாக இருந்தது. அதை உடைத்து, தி. மு. க. தொழிற் சங்கங்களை ஏற்படுத்த முத்து எடுத்துக்கொண்ட முயற்சிகள் ஏராளம். அதனால் ஏற்பட்ட சண்டைகளில் அவரது உடலில் 40—க்கும் மேற்பட்ட விழுப்புண்கள் இருந்தன.

மதுரை முத்து என்றவுடன் 'முரடர், பயங்கரமானவர்' என்ற எண்ணம் அவரை நன்றாகத்தெரியாதவர்களுக்குத் தான் தோன்றும். பழகுவதற்கு இனிமையானவர். சிறியவர் ஆனாலும் மரியாதை கொடுப்பவர். இரண்டு முறை மதுரை மேயராக இருந்த போது எந்தக் கட்சியைச் சேர்ந்த கவுன்சிலர் வந்து குறைகளைச் சொன்னாலும் கட்சிப் பாகுபாடு இன்றி, குறைகளைக் களைந்து செயல்பட்டார்.

—ப்ரியன்.

---

உடலும், மனமும், மூளையும் கலங்கிய நிலையில் லாகூர் மனநோய் மருத்துவமனையில் சிறை வைக்கப்பட்டார். கைதிகளுக்கான அந்தப் பகுதியில் கழிவறைகளே கிடையாது! மஞ்சள் காமாலை நோயால் பீடிக்கப்பட்டுச் சிகிச்சை பெற்றார். இதற்குப் பிறகும் கோட்லாக்பாட் சிறையில் மற்றும் ஒரு "விசாரணை" அவருக்குக் காத்திருந்தது. இம்முறை ஒரு மருந்தை ஊசி மூலம் அவருக்குள் பல முறை செலுத்தி இரண்டு கைகளையும் வீங்கச் செய்தனர். பொறுக்க முடியாத வலியில் துடித்தார்.

டிசம்பர் 1982—இல் மீண்டும் மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்பட்டு மருத்துவர்களின் சிபாரிசின் பேரில் விடுதலையானார். "மறுபடி புட்டோவின் கட்சிக்காகப் பாடுபட்டால் தொலைந்தாய்" என்று எச்சரித்து அனுப்பினர்.

இன்று அப்துல் ஹலீம் தன் முப்பது வயதுக்கு மீறிய தோற்றத்துடன் வீங்கிய முகமும், வெறி கொண்ட கண்களுமாய்க் காட்சி அளிக்கிறார்.

"என்னைப் பற்றி உங்கள் புத்தகத்தில் எழுதுங்கள்" என்றார், அப்துல் ஹலீம், நூலாசிரியர் நூர்ஹவுஸைப் பார்த்து.

"பெயரை மாற்றி எழுதினாலும் உண்மை பாகிஸ்தான் அரசுக்குத் தெரிய வருமானால் உன்பாடு ஆபத்தாயிற்றே" என்றார் நூர் ஹவுஸ்.

"பரவாயில்லை. நான் அனுபவித்துக்கொள்கிறேன். ஆனால் இங்கே நடப்பது என்ன என்பது வெளி உலகுக்குத்தெரியவேண்டும்" என்றார் ஹலீம்.

அப்துல் ஹலீம் போன்ற ஒரு நல்ல எழுத்தாளரை நிரந்தரமாய்ப் புண்படுத்தி குலைத்த பெருமை ஜியா ஆட்சியைச்சாரும். அவரைப் போல இன்னும் ஆயிரக்கணக்கான பேர் அவதிப்படுகின்றனர். இத்தகைய அரசியல் கைதிகளின் எண்ணிக்கை அதிக பட்சம் பதினையாயிரம் எனவும் குறைந்த பட்சம் நாலாயிரம் எனவும் மதிப்பிடப்படுகிறது. சமீபத்தில் 152 புதிய சிறைகள் கட்டப்பட்டுள்ளனவாம். இவற்றுள் சில ஐந்தடி அகல, நீள, உயரமே உடையவை.

இத்தகைய அரசியல் கைதிகளுக்கு விடிவு காலம் உண்டா? ஜனநாயகம் மீண்டும் வருமா? உதட்டைப் பிதுக்கித் தலையசைப்பவர்களே அதிகம். "ஒரே ஒரு நம்பிக்கை தான் இருக்கிறது" என்கிறார், ஒரு பாகிஸ்தானி பத்திரிகையாளர். "எங்களை எப்போதும் சர்வாதிகாரிகள்தான் ஆண்டு வருகின்றனர். அடுத்த முறையேனும் ஒருகருணையுள்ள சர்வாதிகாரி வருவார் என்ற நம்பிக்கையில் தான் நாங்கள் காலம் தள்ள வேண்டும்!"

நன்றி: தி கார்டியன்

தமிழ் வடிவம்: எஸ்ஸார்


"ஆமா இன்ஸ்பெக்டர், இந்த தடவை நீங்க அரெஸ்ட் பண்ணும விடக் கூடாது. ஒரோரு தடவை எங்க ராகமாலிகா புடவைகளை சலவைக்குப் போடும் போது, அதை எல்லாம் திருடி வெச்சுக்கிட்டு, பதிலா ஏதோ மட்டமான புடவைகளை கொண்டு குடுக்கிற இதை........"
UMA FEATURES

# பார்த்ததும் கேட்டதும்

## பார்த்தது

ஏ. வி. எம். ஸ்டுடியோவின் புல்வெளி ஒன்றில் 'நல்லதம்பி' படப்பிடிப்பு. டைரக்டர் — எஸ். பி. முத்துராமன்.

ஒரு திறந்தவெளி ஓட்டலில் கார்த்திக்கும் ராதாவும் சாப்பிட்டுக் கொண்டே, பேசிக் கொண்டிருக்கிற மாதிரி காட்சி.

அவர்கள் நெடுநேரமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்கிற 'டைம்–லேப்ஸ்'ஸைக் காட்டுவதற்காக, ஒவ்வொரு ஷாட்டிலும் டேபிளின் மீது கப் – அண்ட் சாசர்களின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்டே போனார், அஸிஸ்டெண்ட் டைரக்டர்.

○ இயக்குனர் எஸ். பி. முத்துராமன்



ஷாட் இடைவேளையில் ஒரு விநாடி நேரம் கிடைத்தாலும் போதும். ராதாவும் - கார்த்திக்கும் ஏதோ பேசி, என்னவோ சொல்லி, எக்கச்சக்கமாய்ச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். சிரித்துக் கொள்வதற்காகவே பேசிக் கொண்டார்கள்.

சர்வராக நடித்த துணை நடிகர், ''காப்பிப் பொடி, பால் பொடி எல்லாம் தீர்ந்து போச்சுங்க'' என்று வசனம் பேச, ''கட், கட், பால்பொடி ஏதுய்யா? காபிபொடி, பால், சர்க்கரை என்று சொல்லு'' என்று வசனத்தைத் திருத்திச் சொன்னார் எஸ்.பி. எம்.

வசனகர்த்தா பஞ்சு அருணாசலமாக இருக்க வேண்டும். ஆனாலும் எஸ்.பி.எம். தான் நடிகர்களுக்கு அவ்வப்போது ஆன்–த ஸ்பாட் டைலாக் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

சப்ளையராக வந்த துணை நடிகர், ஓரிடத்தில் வசனத்தை குழறுபடி பண்ணிப் பேசிய போது — எஸ். பி. எம்., ''இந்த டேக்கிலே நீ ஒழுங்காப் பேசலே உன்னை உதைப்பேன்'' என்றார். பாதி வேடிக்கையாகவும், பாதி சீரியஸாகவும்.

அடுத்த ஷாட்டில், நான்கைந்து ரிகர்ஸலுக்குப் பிறகு டேக் போடும்போது, ராதா, வசனத்தின் கடைசிப் பகுதியை மறந்து விட்டு, பே... என்று விழிக்க, டைரக்டர் 'கட்' சொல்லிவிட்டு ஓடிவந்து, ''என்னம்மா... சரி.,சரி... நோ.சே. நோ ப்ராப்ளம் அடுத்த டேக் போகலாம்'' என்றார், அன்பாக!

'ஒரே தவறுக்கு துணை நடிகருக்கு ஒரு நியாயம், ஹீரோயினுக்கு ஒரு நியாயமா?' என்றது மனம்.

'அட, சும்மாகிட. இதுதான் சினிமா உலகம்' என்று அதட்டி வைத்தேன், அதை!

## கேட்டது

அதே ஏ. வி. எம். ஸ்டுடியோவின் எடிட்டிங் பிரிவில் எடிட்டர் லெனினின் அறை. வெள்ளை ஜிப்பாவிற்குள்ளிருந்து தலையை வெளியே நீட்டி, என்னவோ அவசரம் அவசரமாய் எடிட் செய்து கொண்டிருந்தார், லெனின். இவர் தந்தை டைரக்டர் பீம்சிங் சினிமா உலகில் தமக்கென ஒரு சகாப்தத்தைப் படைத்தவர். லெனினோடு பேசிக் கொண்டிருந்தபோது—

## ரசிகர்களின் கைத்தட்டல் யாருக்குப் போய்ச் சேருகிறது?



○ எடிட்டர் லெனின்

''நமது படங்களில் உள்ள எடிட்டிங் டெக்னிக் வெளிநாட்டுப் படங்களோடு ஒப்பிடும் போது எப்படி இருக்கிறது?''

''வெளிநாட்டுப் படங்களில் கதை, காட்சி அமைப்பு, எடிட்டிங் என்று எல்லா வகையிலும் சிறப்பாக இருப்பதைப் போல் இந்தியப் படங்கள் இருப்பதில்லைதான். காரணம், திட்டமிட்டுச் செயல்படாமை, பொருளாதாரக் குறைவு இவைகள் தான். நாம் ஒரு படத்தைக் குறைந்தது ஒரு மாதத்திற்குள் கூட முடித்து விடுகிறோம். ஆனால் அவர்களோ ஒரு வருடம் வரை ஷாட் பை ஷாட் பிரித்து அங்குலம் அங்குலமாக அலசி ஆராய்ந்து, டிஸ்கஸ் பண்ணி, பிறகு அந்தக் கதையை வீடியோ படமாக்கி, திரைப்படத்திற்குரிய எஃபெக்ட் கிடைக்கிறதா என்று பார்த்து, அதன் பின் தான் படமாக எடுக்கிறார்கள். இதற்காக அவர்கள் செலவைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படுவதில்லை.

''ஆனால் நம்முடைய தயாரிப்பாளர்கள் வட்டிக்குப் பணம் வாங்கி இருப்பார்கள். வட்டியே அவர்களை விழுங்கி விடும் நிலைமை. படத்தை விற்று முதலாக்கி கைநட்டமாகாமல் இருந்தால் போதும் என்ற நிலையில் அரைகுறையாகப் படத்தை முடித்து வெளியிட்டு விடுவார்கள். நம் படஉலக சூழ்நிலை அப்படி!''

''டைரக்டர், ஒளிப்பதிவாளரைப்போல எடிட்டருக்கு ஒரு பிரபலம், பேனர் வால்யூ கிடைப்பதில்லையே?''

''ஆமாம். குறிப்பிட்ட ஒரு காட்சியைப் பார்த்து 'ஆகா டைரக்ஷன் பிரமாதம் என்றோ, ஒளிப்பதிவு அருமை என்றோ சொல்வது போல் தனியாக எடிட்டிங் தெரிவதில்லை. ஆனால் படத்தின் ஒவ்வொரு பிரேமும் எடிட்டரின் விரல்களில் தான் உருவாகி, படமாகிறது. படத்தின் கதையிலேயே எடிட்டிங் கலந்து விடுகிறது. எனவே படத்துக்குக் கிடைக்கிற எல்லா கைத்தட்டல்களும் அதன் எடிட்டருக்குத் தான் போய்ச் சேருகிறது. எடிட்டருக்கு என்று தனியாக ஒரு விளம்பரம், பிரபலம் தேவை இல்லை என்று நான் நினைக்கிறேன். எடிட்டர் தான் படம்: படம்தான் எடிட்டர்.''

''ஒரு டைரக்டருக்கு எடிட்டிங் நாலட்ஜ் இருந்தால் தான் வெற்றி பெற முடியும் என்கிறார்கள். ஆனால் சில எடிட்டர்கள் டைரக்ட் செய்த படங்கள் எல்லாம் தோல்வி அடைந்திருக்கிறதே...?''

''ஒரு எடிட்டர் டைரக்ஷன் துறையில் வெற்றி பெற வேண்டுமானால் அவர் எடிட்டராக மட்டும் இருந்தால் போதாது. திரைக் கதையை அழகாக விளக்கிச் சொல்லும் தன்மையும் இருந்தால் தான் நிலைபெற முடியும்.

''ஆங்கிலப் பட டைரக்டர் ஹிட்ச்காக், 'Editor is a cutter' என்றார். அதாவது 'எடிட்டர் சும்மா வெட்டி ஒட்டுபவர் மட்டுமே' என்கிற அர்த்தத்தில். ஆனால் அதே ஹிட்ச்காக் பின்னால் தன்னைத் திருத்திக் கொண்டு, 'Editor is a creator' என்றார்.

''காரணம், அவரது 'சைக்கோ' படத்தில் குளியலறையில் ஒரு பெண் கொலை செய்யப்படும் காட்சியை 13 ஷாட்களாகப் பிரித்து எடுத்திருந்தார். எடிட்டர் அதை இணைத்துப் போட்டுக் காட்டிய போது அசந்துபோனார் ஹிட்ச்காக். படத்தின் வெற்றியே அந்தக் காட்சியில் தான் இருந்தது.''

''வசதியுள்ள எடிட்டர்கள், ஸ்டுடியோக்களில் தங்களுக்கென்று எடிட்டிங் ரூம் போட்டுக் கொள்கிறார்கள். சொந்தமா எடிட்டிங் அறை வைத்திருப்பவர்களிடம் தான் தயாரிப்பாளர்கள் வருகிறார்கள். இதனால் எடிட்டிங் ரூம் வைத்துக்கொள்ள வசதி இல்லாத புதிய எடிட்டர்கள் பாதிக்கப் படுகிறார்கள் என்று சொல்லப்படுகிறதே...?''

''எடிட்டிங் ரூம் பற்றாக்குறை என்பது சில வருடங்களுக்கு முன்னால் வரை இருந்தது. இப்போது புதிதாக நிறைய எடிட்டிங் ரூம்கள் உருவாகி விட்டன. எனவே ரூம் கிடைத்தவர் — கிடைக்காதவர் என்ற பிரச்சினை இல்லை'' என்றார் லெனின்.

—சம்பத்ஜி

---

## அடுத்த இதழில்:

# கொரில்லாப் போர்



தமிழ் ஈழத்தின் விடுதலைப்புலிகள் நடத்திவரும் கொரில்லாப்போர் பற்றி அடிக்கடி செய்திகள் படிக்கிறோம். கொரில்லாப் போர் என்றால் என்ன? அது எங்கே, எதற்காக, எப்போது தோன்றியது? ரசமான பல தகவல்களை விரிவாகத் தருபவர் **மேஜர் ஜெனரல் மகாதேவன்.**

## நீங்கள் கேட்டவை: தராசு

○ எஸ். மோகன், சென்னை—33.

? குற்றம் சொல்ல வந்து விட்டீரே? இதயக்கனி படத்தின் அந்தப் பாடலை ஏன் திரையிட்டார்கள் தெரியுமா? 'நீங்க நல்லா இருக்கோணும் நாடு முன்னேற; இந்த நாட்டிலுள்ள ஏழைகளின் வாழ்வு முன்னேற' என்ற பாட்டுக்காகத்தான், புரிகிறதா?

! அந்தப்பாடலை நான் குறைகூறவில்லையே? எம். ஜி. ஆரைச் சூழ்ந்து கொண்டு அரை நிர்வாண உடையில் பெண்கள் கூத்தடிக்கும் ஆபாசத்தை அல்லவா கண்டித்தேன்! சினிமா நடிகர் எம். ஜி. ஆருக்கும் முதல்வர் எம். ஜி. ஆருக்கும் நிறைய வித்தியாசம் உண்டு. சினிமாவுக்காக எம். ஜி. ஆர். சம்மதித்த ஒரு காட்சியை முதல்வர் எம். ஜி. ஆரை மனத்தில் கொண்டு இன்று திரையிட்டுக் காட்டுவது அவருக்கு நியாயம் செய்வதாகாது. அதுவும் அவர் ஜீவமரணப் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கையில் இப்படிச் செய்தது நிச்சயமாக ரசனைக் குறைவுதான்; அநாகரீகம்தான். என்னால் மன்னிக்கவே முடியாது சார். பாமர மக்கள் வரவேற்கிறார்கள் என்பதாலேயே ஒரு காரியம் சரியானதாகி விடாது.

○ ஆர். அரிகோபி, குடியாத்தம்.

? நடிகைகளின் கன்னங்களையும், ஆட்டங்களையும் ஒப்பிட்டுப் பேச எத்தனையோ பத்திரிகைகள் உள்ளனவே, தராசுக்குப் பதில் கூற வேறு கேள்வியா அகப்படவில்லை?

! இதோ, உங்கள் அதிமேதாவித்தனமான கேள்வி அகப்பட்டு விட்டது. திருப்தி தானே?

○ ரம்யா, கோவை.

? பழையதை நினைத்து ஆறுதல் அடைவதுண்டா?

! பெண்டாட்டி சமையல் சகிக்க முடியாது போனால் பழையதை நினைத்துதான் ஆறுதல் அடைய வேண்டும். நல்லவேளை எனக்கு அந்த அவசியமும் இல்லை. நான் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் நோக்குபவன். பழையதை நினைத்துப் பெருமைப்படலாம்; இன்றைய அவலங்களுக்கு ஆறுதல் தேடக் கூடாது.

○ வி. ஏ. என். சுவாமி, பாட்னா.

? பிரதமராக நியமிக்கப்பட்டபின், முதன் முதலாக ராஜீவ் டீ. வி. யில் பேசியது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

! சொந்தத் துயரையும் மீறிய கண்ணியத்தை தொனித்தது, வன்முறைகளைக் கைவிடுமாறு கோரிய போது. அனாலும் 'இதை நான் அனுமதிக்க முடியாது' என்று கூறுவதற்குப் பதில் 'இதை எனது அரசாங்கத்தால் அனுமதிக்க முடியாது' என்று சொல்லியிருக்கலாம். போகட்டும்; அனுபவம் பெறப் பெற இது போன்ற சின்னத் தவறுகளைக்கூடத் தவிர்த்து விடுவார் என்று நம்புவோம்.



○ பெருந்தன்மை

○ சிறு தவறு



○ இதயக்கனி



○ வெற்றியின் காரணம்

○ மர்மம்



# புயல் ஓய்ந்ததா?



○ மங்களா சேஷாத்திரி, சென்னை–50.

? இந்திரா காலமானதும் கருணாநிதி அஞ்சலி செலுத்தப் போகாததின் மர்மம் என்ன?

! ராஜாஜி காலமான போது இந்திரா இறுதி அஞ்சலி செலுத்த இங்கு வராத தன் மர்மத்தை நீங்கள் விடுவிக்க முடியுமானால் சொல்லுங்கள், நானும் இந்த மர்மத்தை விடுவித்து விடுகிறேன்!

? தொலைபேசியில் பேச்சுக்கு இடையில் கேட்கும் கிராஸ் டாக்குகளை அனுபவித்ததுண்டா?

! முன்பெல்லாம் டெலிபோன் ரிசீவரை எடுத்து ஓர் எண் டயல் செய்ததும் ஒரு திரைப்பட விநியோகஸ்தர் எந்தெந்தப் படங்கள் டப்பா ஆகி யார், யார் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள் என்றும், அந்தப் படத்தைப் பற்றியும் படு உற்சாகமாகத் தமது நண்பர்களிடம் விமர்சிப்பது கேட்கும். அடிக்கடி. எத்தனை பணம் கறுப்பில் வாங்கலாம் எந்த அளவுக்குக் கணக்கில் காட்டலாம் என்று ''அறிவுரை'' வழங்குவதும் கேட்கும். இப்போ நுங்கம்பாக்கம் எலக்ட்ரானிக் எக்ஸ்சேஞ்ச் வந்த பிறகு இந்த ரசமான இலவச கேளிக்கையை அடியோடு இழந்து விட்டேன்.

○ ஆர். சுப்பாராவ், திருக்கோவலூர்.

? இந்திராவின் மறைவை இனிப்பு வழங்கிக் கொண்டாடியவர்களிடம் ஒற்றுமையை நாடுவது வெற்றி அளிக்குமா?

! காந்திஜி இறந்த போது பாயசம் வைத்துச் சாப்பிட்டவர்கள் கூட உண்டு. இதுபோன்ற சில வக்கிரபுத்திக்காரர்களுக்காக அவர்கள் சார்ந்துள்ள சமூகத்தையே பழிப்பதும் விரோதித்துக் கொள்வதும் அழகல்ல.

○ என். உலகநாதன், லால்குடி.

? தோற்றுப்போன மாண்டேல் ரீகனை நம் ஜனாதிபதி அவரைக் கௌரவிப்போம் என்று கூறியுள்ளாரே?

! நம்மவருக்குத் தெரியாத உயர் பண்பாடு.

○ எம். ராஜேந்திரன், லால்குடி.

? ரீகன் மீண்டும் தேர்தலில் வெற்றி பெற்றதற்கு என்ன காரணம்?

! வரிகளைக் குறைத்தார்; அதன் விளைவாக வேலையில்லாத் திண்டாட்டமும், பண வீக்கமும் குறைந்தன. மக்கள் திருப்தியுற்றனர். வோட்டுப் போட்டனர். அணு ஆயுதக் குவிப்பு விஷயத்தில் விடாப்பிடியாக இருப்பது மைனஸ் பாயிண்ட் என்றாலும் மேற்சொன்ன பிளஸ் பாயிண்ட்டுகள் வெற்றிதேடித் தந்தன. எதிர்க் கட்சியினர் ரேகனை வயதானவர், டியூப் லைட் என்று வர்ணித்தது. தனிப்பட்ட முறையில் தாக்கியது ரேகனுக்கு ஆதரவைப் பெருக்கியது. நம் வாக்காளர்கள் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயம் இது.

○ எஸ். ரவீந்திரன், கடலூர் ★

? அ. தி. மு. க., இ. காங்கிரஸ் இரண்டும் அனுதாப வோட்டின் மூலம் வெற்றிபெறுமா?

! அனுதாப வோட்டின் அடிப்படையில் வெற்றி பெறுவதற்கான சாத்தியக் கூறுகள் நிறையவே உள்ளன. ஆனால் அதில் பெருமை என்ன இருக்கிறது? இந்திராகாந்தி மறைந்து துக்கம் அனுஷ்டிக்கும் நாட்கள் முடிவதற்கு முன்பாகவே 'கைச்சின்னத்துக்குப் போடும் வோட்டு இந்திராகாந்திக்குச் செலுத்தும் மரியாதை' என்பது போன்ற கோஷங்களை வடக்கே இ. காங்கிரஸ்காரர்கள் உற்பத்தி செய்ய ஆரம்பித்தது அசிங்கம்.

○ நாகை ஜி. அருமை, சென்னை–1.

? இந்திராகாந்திக்கு மக்களிடம் இருந்த அதே செல்வாக்கு ராஜீவ்காந்திக்கு இருக்குமா?

! நேருஜிக்கு இருந்த செல்வாக்கு இந்திரா காந்திக்கு இருக்குமா என்று முன்பு கேட்கப்பட்டதையே இப்போது ராஜீவ் விஷயத்தில் கேட்கிறோம். இந்திரா பிரதமராக்கப்பட்ட சமயம், ''கவலையாக (நெர்வஸ்) இருக்கிறது'' என்றுதான் அருணா அஸப் அலியிடம் சொன்னாராம். ஆனால் சீக்கிரமே தன்னம்பிக்கை பெற்று துணிச்சலுடன் செயலாற்றி, மக்களிடம் செல்வாக்கையும் வளர்த்துக் கொண்டு விட்டார். அப்படி ராஜீவ் காந்தியும் திறம்படச் செயல்பட்டுப் பிரகாசிப்பார் என்று நம்புவோம்.

○ அண்ணாமலை, சென்னை.

? புயல் ஓய்ந்ததா?

! புயல் ஓய்ந்து விட்டது. ஆனால் அதன் உடன் விளைவுகளை புயல்வேகத்தில் சமாளிக்க வேண்டிய கடமை அரசுக்கு இருக்கிறது. புயல் சேதங்களைப் பார்வையிட சூறாவளிச் சுற்றுப்பயணம் செய்த ராஜீவுக்கு நன்றியும் வாழ்த்தும். அவர் அங்கவஸ்திரம் அணிந்து வந்தது மட்டுமல்ல; கூறிய சிறப்பான யோசனைகளும் கவனத்தைக் கவர்ந்தன. ஆந்திரத்துக்கும் தமிழகத்துக்கும் தரப்பட்டுள்ள 12 கோடியும் பாதிக்கப்பட்டவர்களைச் சென்றடைய வேண்டுமே என்ற கவலை மேலெழுகிறது. இன்று மக்கள் அடைந்துள்ள கஷ்டங்கள் ஒருபுறமிருக்கத் தஞ்சையிலும் திருச்சியிலும் அறுவடையாகிக் கொள்முதல் செய்து கிடங்குகள் இல்லாததால் திறந்தவெளியில் அடுக்கி வைக்கப்பட்டுள்ள தானிய மூட்டைகளை நினைத்தால் எதிர்காலம் பற்றியும் ரொம்பக் கவலையாக இருக்கிறது.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

எஸ். ரவீந்திரன்,
2, நண்பர் நகர்,
கடலூர்–607 001.






● அடுத்த வாரமும் உமது விமர்சகர் ஜெயமன்மதன் வேதாளத்தோடு பேசி விமர்சனம் எழுதுவதாக இருந்தால் வாசகர்களுக்கு இலவச இணைப்பாக 'வேப்பிலைக் கொத்து' ஒன்று அனுப்ப ஏற்பாடு செய்யுங்கள்.
சிவகாசி — கே. ராகவன்.

● திருமதி. வாஸந்தி அவர்களின் ''மனிதாபிமானம் மடிந்த நாட்கள்'' படித்தேன். இதுவரைக்கும் எந்தப் பத்திரிகையும் சுட்டிக் காட்டாத Cancerous Growth — எதற்கும் பிரதமரையே பிரதமரின் அனுமதியையே எதிர்நோக்கும் கையாலாகாத்தனம்; நபும்ஸகத்தனம் ஆகியவற்றைத் தைரியமாக எடுத்துக் காட்டி உள்ளார். இந்த நியாயமான தார்மீகக் கோபம் எப்போது ஒவ்வொரு பாரதியனின் மனதிலும் தோன்றுகிறதோ அன்றுதான் கதிமோக்ஷம்.
சென்னை—24. — வி. என். சுப்பாராவ்.

● நினைவு அலைகள் — பல்வேறு சூழ்நிலையில் எடுக்கப்பட்ட இந்திராவின் புகைப்படங்கள் அனைத்தையும் ''கல்கி''யில் பார்த்தவுடன் — தஞ்சையில் ராஜராஜசோழன் முடிசூட்டு விழாவில் அவரைப் பார்த்த ஞாபகம் கண் முன் நினைவு அலைகளாய்த் தொடர்ந்தது.
தேரழுந்தூர் — கி. சுப்பு.

● கல்கி 11.11.84 இதழ் அட்டைப்படத்தில் ''இந்திரா பிரியதர்சினி'' இடம்பெற்றிருந்தது நம்மைவிட்டு அவர் மறைந்தாலும் அவர் நம்மோடு இருக்கிறார் என்ற உணர்வை ஏற்படுத்தியது.
சிதம்பரம். — மா. வடிவேல்.

● இந்திரா இந்தியா ஆனார் தலையங்கம் அர்த்த புஷ்டியுள்ள... அழுத்தமான... உன்னதமான உயர்ந்த தலையங்கம்!
அயன்புரம். — த. சத்தியநாராயணன்.

● கோவி. மணிசேகரனுக்கு கலர் படத்தோடு கவர் ஸ்டோரி வெளியிட்டதன் மூலம் எழுத்தாளர் சமூகத்தையே கௌரவப்படுத்தி விட்டீர்கள்.
அந்தணப்பேட்டை. — அ. அன்பழகன்.

● பிரதமரின் இறுதி யாத்திரையை நேரில் பார்க்க முடியாத என் போன்றவர்களுக்கு 'கல்கி'யின் படங்கள் ஓர் ஆறுதல்.
துடுப்பதி — எம். பி. ரங்கநாதன்.

● டெல்லியிலிருந்து கல்கி வாசகர்களுக்கு எழுத்தாளர் வாஸந்தி அவர்கள் அனுப்பிய ஸ்பெஷல் ரிப்போர்ட் நெஞ்சை நெகிழ வைத்துவிட்டது. அட்டைப்படத்தைப் பிரேமிற்குள் பத்திரப்படுத்தி விட்டேன்.
குடியாத்தம் (வ. ஆ.) — ஆர். அரிகோபி.

● பாரத மக்களின் சோகத்தை முழுமையாகப் பிரதிபலிக்கும் தங்கள் தலையங்கத்தின் ரத்தினச் சுருக்கமான தலைப்பு. அதாவது 'இந்திரா இந்தியாவானார்' என்பது மனச் சாந்தியையும், ஆறுதலையும் அளிக்கிறது.
ஸ்ரீரங்கம். — ஆர். கோபாலன்.

● சுதந்திரத்திற்கு முன்னதான பாரத நாட்டையும் — இன்றைய பாரத நாட்டையும் ஒப்பிட்டுக் கொள்ள மதிப்பிற்குரிய கல்யாணசுந்தரம் அவர்களின் பேட்டி பயனுள்ளதாக அமைந்தது.
பெங்களூர்—21. — ட. மூர்த்தி.

● மறைந்த நமது ''அன்னை''யின் இறுதி ஊர்வலத்தைத் தொலைக்காட்சி மூலமும் வானொலி மூலமும் ஒளி — ஒலி பரப்பினார்கள். தொலைக்காட்சியைப் பார்க்க முடிந்தவர்கள் பார்த்துப் புரிந்து கொண்டார்கள். ஆனால் வானொலி மட்டுமே கேட்க முடிந்த சில பாமர மக்கள் ஹிந்தி, ஆங்கில வர்ணனைகளைப் புரிந்து கொள்ள முடியாமல் குழம்பினார்கள். வர்ணனைகளுக்கு நடுவே, சென்னை வானொலி நிலையத்தாராவது அவ்வப்போது தமிழிலும் மொழிபெயர்த்திருக்கலாமே!
மன்னார்குடி. — ஜி. நீலா.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)

# இலவச இணைப்பாக வேப்பிலைக் கொத்து

## ஒரு தீர்ப்பின் பின்னணி

**முன்கதைச் சுருக்கம்:**

இந்தியாவில் பிறந்த ஆங்கிலேயக் குடிமகனான சுவராஜ்பால் எஸ்கார்ட்ஸ், டி. சி. எம். கம்பெனிகளின் ஏராளமான பங்குகளைப் பங்குதாரர்களிடமிருந்து தனது கபாரோ க்ரூப் கம்பெனி மூலம் வாங்க முயன்ற செய்தி சில மாதங்களுக்கு முன் (கல்கி, 29 – 7 – 84) அலசப்பட்டது நினைவிருக்கலாம். இதை ஆட்சேபித்து எஸ்கார்ட்ஸ் கம்பெனி சார்பில் சேர்மன் எச். பி. நந்தா பம்பாய் உயர்நீதிமன்றத்தில் ரிட் வழக்கு போட்டிருந்தார்.

பம்பாய் உயர்நீதிமன்றம் மூன்று விஷயங்களைத் தீர்மானிக்க வேண்டியிருந்தது. 1. அன்னியச் செலாவணிக் கட்டுப்



# மீண்டும் ஸ்வராஜ்பால்

பாடு விதிகளை மீறி ரிசர்வ் வங்கி ஸ்வராஜ் பாலின் பணத்தை இந்தியாவுக்குள் அனுமதித்தது சரியா? 2. எல். ஐ. சி.யும் பிற நிதி நிறுவனங்களும் தங்களிடமிருந்து வாங்கப்பட்ட கடனைக் குறிப்பிட்ட காலக்கெடுவுக்கு முன்னரே எஸ்கார்ட்ஸ் திருப்பித் தந்த போது அதை வாங்க மறுத்தது சரியா? 3. எஸ்கார்ட்ஸின் அசாதாரண ஜெனரல் மீட்டிங்கை எல். ஐ. சி. கூட்டி அக்கம்பெனியின் பதினைந்து டைரக்டர்களுள் ஒன்பது பேரைத் தன் இஷ்டத்துக்கும் சௌகரியத்துக்கும் ஏற்ப மாற்றி, தனக்குச் சாதகமான நிதி நிறுவனங்களின் அதிகாரிகளை அந்த இடத்தில் நியமிக்க முயன்றது நியாயமா? (பங்குகளை வேறு பெயருக்கு மாற்ற கம்பெனி போர்டுக்கே உரிமை இருப்பதால் ஸ்வராஜ் பால் பெயருக்குப் பங்குகளை மாற்றுவதற்காக எஸ்கார்ட்ஸ் போர்டையே மாற்றி அமைக்க எல். ஐ. சி முற்பட்டது நினைவிருக்கும்.)

**பம்பாய் உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பு:**

1. செப்டம்பர் 19, 1983 அன்று அன்னியச் செலாவணி விதிகள் மாற்றப்பட்டன. இப்புதிய விதிகள் கடந்த காலத்துக்கும், அதாவது ஏப்ரல் 14, 1982–லிருந்து, பொருந்தும் என்று அவ்விதிகளிலேயே ஒரு ஷரத்து மத்திய அரசால் சேர்க்கப்பட்டிருந்தது. (இது ஸ்வராஜ்பாலுக்கு உதவுவதற்காகவே செய்யப்பட்டதாகக் கருத இடமுண்டு.) இப்போது உயர்நீதிமன்றம் இதை சட்டத்துக்குப் புறம்பானது என்று அறிவித்துள்ளது. 1983, செப்டம்பர் 19 அன்று இந்திய அரசால் மாற்றப்பட்ட இவ்விதி அந்தத் தேதிக்குப் பிறகே அமுலுக்கு வரலாம் என்று தெரிவித்துள்ளது. மேலும் ரிசர்வ் வங்கியின் அனுமதி இன்றியே பஞ்சாப் நேஷனல் பாங்க், கபாரோ க்ரூப்பை எஸ்கார்ட்ஸ் பங்குகள் வாங்க அனுமதித்தது தவறு என்றும் தீர்ப்பு வழங்கியுள்ளது. சட்டத்துக்குப் புறம்பான இந்த வர்த்தகப் பரிமாற்றத்தை ரிசர்வ் வங்கியோ இந்திய அரசோ அங்கீகரிக்க உரிமை கிடையாது என்றும் கூறியுள்ளது, பம்பாய் உயர்நீதிமன்றம். மேலும் ஒரு அயல்நாட்டுக் கம்பெனியின் பங்குதாரர்களுள் அறுபது சதவிகிதத்தினராவது Non - resident இந்தியர்களாக இருந்தால்தான் அந்தக் கம்பெனிக்கு இந்தியக் கம்பெனி ஷேர்களை வாங்க உரிமை உண்டு. இந்த விதிப்படி பார்த்தாலும் கபாரோ க்ரூப் இங்கு எஸ்கார்ட்ஸ் பங்குகளை வாங்கியது தவறானதாகிறது.

2. எஸ்கார்ட்ஸ் எல். ஐ. சிக்கும் பிற நிதி நிறுவனங்களுக்கும் காலக்கெடுவுக்கு முன்பாகவே திருப்பித் தந்த கடன் தொகையை அந்நிறுவனங்கள் வாங்க மறுத்தது சட்டத்துக்குப் புறம்பான செயல், அதிகார துஷ்பிரயோகம் என்கிறது நீதிமன்றம்.

3. பங்குகளை ஸ்வராஜ்பால் பெயருக்கு மாற்றுமாறு எஸ்கார்ட்ஸைக் கட்டாயப்படுத்த முயன்று தோற்றுப்போன எல். ஐ. சி., அசாதாரண ஜெனரல் மீட்டிங்கை ஏற்பாடு செய்து, போர்டின் பதினைந்து டைரக்டர்களுள் ஒன்பது பேரை நீக்கி அவர்களிடத்தில் நிதி நிறுவனங்களின் முழுநேரப் பணியாளர்களை நியமித்தது. இது தவறு. செல்லாது என்கிறது உயர்நீதி மன்றம். எல். ஐ. சி. அதற்கு அனுமதிக்கப்பட்ட வழிமுறைகளுக்குட்பட்டே செயல்பட வேண்டும். ஒரு கம்பெனியின் பெரும்பான்மை பங்குதாரர் என்ற முறையில் அசாதாரண ஜெனரல் மீட்டிங்கைக் கூட்ட எல். ஐ. சி சட்டத்தின் கீழ் அனுமதி கிடையாது. எஸ்கார்ட்ஸ் டைரக்டர்களை மாற்ற எந்த விதமான காரணத்தையும் எல். ஐ. சி. கூறவில்லை. மாற்ற 'விரும்புவதாக' மட்டுமே

கூறியுள்ளது. இது முற்றிலும் தவறு. ஒப்புக் கொள்ள முடியாதது.

**தீர்ப்பின் சாராம்சம்:**

நீதித்துறையின் சுதந்திரம் எவ்வளவு முக்கியமானது என்பதை மீண்டும் ஒருமுறை நமக்கு உணர்த்துகிற இந்த மகத்தான தீர்ப்பின் முடிவு சுருங்கச் சொன்னால் இது தான்:

1. எஸ்கார்ட்ஸின் போர்ட் பங்குகளை ஸ்வராஜ்பால் பெயருக்கு மாற்ற மறுத்தது சரியே.

2. அந்தப் பங்குகள் இனி பழைய உரிமையாளரையே சேரும். அவை விற்பனை ஆகிவிட்டதாகக் கொள்ளப்பட மாட்டாது.

3. பழைய இயக்குனர்களே எஸ்கார்ட்ஸின் போர்டில் இருப்பர்.

**விளைவுகள், இனி விளைவுகள்:**

ஒரு கம்பெனிக்கு ஒரு நிதி நிறுவனம் கடன் கொடுத்தாலேயே அது அந்தக்கம்பெனியை அடிமை போல் நடத்த முடியாது; நன்றாக நடக்கும் அந்தக் கம்பெனியை நிதி நிறுவனம் தன்னுடைமையாக்கிக் கொள்ள முடியாது என்பதை நீதிமன்றத்தின் தீர்ப்பு தெளிவுபடுத்தியுள்ளது.

எஸ்கார்ட்ஸ் பங்குகளை கபாரோவுக்கு (ஸ்வராஜ் பால் நிறுவனம்) விற்றுப் பணம் பெற்றவர்களின் பெயரிலேயே அந்தப் பங்குகள் தொடர்ந்து இருக்கும் விநோதமான நிலைமை இந்தத் தீர்ப்பின் மூலமாக ஏற்பட்டுள்ளது.

சட்டத்துக்குப் புறம்பான பண மாற்றத்தை ஏற்றுக் கொண்ட பஞ்சாப் நேஷனல் வங்கி தர்ம சங்கடத்தில் சிக்கியுள்ளது.

ஸ்வராஜ் பால் கையைப் பிசைந்து கொண்டு நிற்பாரா? தொடர்ந்து கோர்ட்டுகளில் இறங்கிப் போராடுவாரா? ஸ்வராஜ் பாலை அணுகிய போது பிரதமர் இந்திராஜியின் திடீர் மறைவால் தாம் துக்கத்தில் ஆழ்ந்திருப்பதாகவும் தற்போது ஒன்றும் சொல்வதற்கில்லை என்றும் கூறிவிட்டார்!

மத்திய அரசின் பேரிலும் ரிசர்வ் வங்கியின் பேரிலும் நேரடியாகக் குற்றம் எதுவும் ருசுவாகவில்லை என்று உயர்நீதிமன்றம் தீர்ப்பு வழங்கி விட்டிருந்தாலும் எல். ஐ. சி. செய்ததையெல்லாம் கைகட்டிப் பார்த்துக் கொண்டிருந்த மத்திய அரசுக்கு ஏதோ ஓர் உள்நோக்கம் இருந்திருக்க வேண்டும். எனவேதான், யாரோ சில இந்திய அரசியல் பெரும்புள்ளிகளின் பணம் தான் ஸ்வராஜ் பால் உதவியுடன் இந்தியாவுக்குள் வர இந்த அசாதாரண முயற்சி என்று பரவலாகப் பேசப்பட்டு வந்தது. அப்படியானால் மத்திய அரசு இனி என்ன செய்யும்? எல். ஐ. சியின் எம். டி. அவசரமாக டெல்லிக்குக் கிளம்பிப் போயிருக்கிறார். புதிய பிரதமரோ கைநிறையக் காரியங்களுடன் போராடிக் கொண்டிருக்கிறார். முக்கிய காரியங்களை முதலில் கவனித்துவிட்டு இந்த விஷயத்துக்கு அவர் வரும்வரை எஸ்கார்ட்ஸுக்குச் சிந்திக்கவும், திட்டமிடவும் அவகாசம் இருக்கும்.

எல். ஐ. ஸி சுப்ரீம் கோர்ட்டில் பம்பாய் ஹைகோர்ட்டு தீர்ப்பை எதிர்த்து இரண்டு அப்பீல்கள் செய்துள்ளதாகக் கடைசிச்செய்தி. நவம்பர் 19ந் தேதி இந்த இரண்டு அப்பீல்களும் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

-'மிருத்யுஞ்ஜயன்'



பம்பாயில் வாழ்ந்து வரும் மைக்கேல் என்பவர் இந்த அதிசயச் செடியை உருவாக்கி உள்ளார். ஒட்டுச் சேர்க்கையின் மூலமாக ஒரே செடியில் 31வேறுபட்ட இலைகளை இவர் வளர்த்துள்ளார். இவை 22 மாநிலங்களையும் 9 யூனியன் பிரதேசங்களையும் குறிக்கின்றன. மைக்கேல் இம்மரத்துக்குத் 'தேசிய ஒருமைப்பாடு மரம்' எனப் பெயரிட்டுள்ளார். பன்னிரண்டு வருட முயற்சியின் விளைவு இச்செடி!

'வீக்லி சன். தி வீக்' இதழ்களிலிருந்து.

—கீதாபஞ்சு.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

